# கம்பரும் கவிராயரும்



பேராசிரியை டாக்டர்
சரசுவதி இராமநாதன்



வானதி பதிப்பகம்
23, தீனதயாளு தெரு,
தி.நகர், சென்னை–17.

முதற் பதிப்பு : மே, 2007



புதுச்சேரி கம்பன் விழாவில்
11.05.2007 அன்று வெளியிடப்பெற்றது.

திருநாவுக்கரசு தயாரிப்பு

---

**விலை ரூ. 50.00**

- Title : **KAMBARUM KAVIRAAYARUM**
- Author : **Prof. Saraswathi Ramanathan**
- Language : Tamil
- Subject : Literature
- Edition : First Edition, May, 2007
- Pages : viii + 128 = 136 pages + 3 Art plates
- Published by : **VANATHI PATHIPPAKAM**
  23, Deenadayalu Street,
  Thyagaraya Nagar, Chennai–600017.
  © 24342810 / 24310769
  E-Mail: vanathipathippakam@vsnl.net
  Website: www.vanathipathippakam.com
- Price : **Rs. 50-00**

---

Laser typeset at : azhagu systems, chennai-17. © 42127214

Printed at : NOVENA OFFSET PRINTING CO., Chennai - 5 ⊘ 28446166, 28446891

# பதிப்புரை

பேராசிரியை டாக்டர் சரசுவதி இராமநாதன் அவர்களின் 'கம்பரும் கவிராயரும்' என்னும் இந்தப் புதிய நூலில் ஒன்பது இலக்கியக் கட்டுரைகள் நவரத்தினங்கள் என ஒளி வீசுகின்றன. ஒவ்வொரு கட்டுரையும் ஒவ்வொரு ரத்தினம் போல் ஒவ்வொரு வகையில் சிறப்பாக அமைந்துள்ளது. இந்த இரத்தினக் கட்டுரைகள் கம்பராமாயண ஆய்வு இலக்கியத் திற்குப் புத்தொளி அளித்துப் புதுப்பொலிவை ஏற்படுத்து கின்றன. இவை இணைந்து தமிழன்னைக்குப் புதியதோர் ஆபரணமாகின்றன.

நூலாசிரியர் டாக்டர் சரசுவதி இராமநாதன் அவர்கள் தமிழ்நாடு முழுதும் மட்டுமன்று, உலகில் தமிழொலி கேட்கும் இடங்களிலெல்லாம் நன்கு அறிமுகமான இலக்கியச் சொற் பொழிவாளர் ஆவார். கேட்டார்ப் பிணிக்கும் தகையவாய்க் கேளாரும் வேட்பச் சொற்பொழிவாற்றுவதில் வெற்றிகண்ட இவரது பேச்சில் கம்பீரம் உண்டு, கருத்தாழம் உண்டு. அதே நேரத்தில் பேச்சைக் கேட்பவர் சலிப்படையாதபடி, மேற்கோள் பாடல்களை இனிய குரலில் இசையுடன் பாடிப் பரவசப் படுத்துவார். இந்தச் சிறப்புகளை எல்லாம் இந்த நூலிலும் வாசகர் நிச்சயமாக உணர்வார்.

கம்பராமாயண அறிஞரான டாக்டர் சரசுவதி இராமநாதன் அவர்கள், கம்பனின் அடியொற்றி மக்களுக்குப் புரியும் வகையில், அவர்களைக் கவரும் வகையில், "இராமநாடகக்

கீர்த்தனை'' என்னும் இராமாயணப் பாடல்களின் தொகுப்பை இயற்றிய சீர்காழி அருணாசலக் கவிராயரை இந்நூலின் பெயர் தாங்கிய நீள்கட்டுரையில் அறிமுகப்படுத்துகிறார். கவிராயர் பெயரையும் நூலையும் மக்களில் பலர் அறிந்திராமல் போகலாம். ஆனால் அவருடைய பாடல்கள் உயிரோட்டத்துடன் நீடித்து வருகின்றன. மேடையில் இசை நிகழ்ச்சிகளிலும் நடன நிகழ்ச்சிகளிலும் பாடப்படுகின்றன. இத்தகைய சிரஞ்சீவி வரம் பெற்ற இராமாயணப் பாடல்களில், ஏன் பள்ளி கொண்டீர் ஐயா, ராமனுக்கு மன்னன் முடி தந்தாலே, யாரோ இவர் யாரோ, வந்தான் வந்தான் பரதா, கண்டேன் சீதையை போன்ற பாடல்கள் சிறப்பிடம் பெறுகின்றன.

'புதிய ஆண்மை' கட்டுரையில் திருவள்ளுவருடன் கம்பரை ஒப்பிட்டு, கம்பராமாயணத்தில் இல்லாத எப்பொருளும் இல்லை என்னும் தமது கருத்தை நூலாசிரியர் சான்று களுடன் நிறுவுகிறார்.

விபீடணன் தலைமுறைகளாகப் பலரால் தவறாகப் புரிந்துகொள்ளப்பட்டு வருகிறார். நூலாசிரியர் அந்தத் தவறான கருத்துக்களை மறுத்து, உண்மையை விளக்கி, விபீடணன் மேன்மையை விளக்கும் ஒரு கட்டுரை தந்துள்ளார்.

சூர்ப்பனகையை வஞ்ச மகள் என்று கூறுவதற்குப் புதிய, சுவையான, ஆழமான விளக்கங்கள் கொண்ட கட்டுரையானது வாசகர்களின் சிந்தனையைத் தூண்ட வல்லது.

சபரியின் அற்புதமான பக்தி பற்றி நாம் அறிவோம். ஆனால் சபரி யார் என அறியோம். அக்குறையைப் போக்குகிறது ஒரு கட்டுரை.

இயற்கைக்கும் மனித உணர்வுகளுக்கும் இடையில் நிலவுகின்ற உறவைக் கம்பராமாயணத்தில் வரும் ஞாயிறு வருணனைகள் விளக்குவதைக் காட்டும் உளவியல் கட்டுரை ஒன்றும் இத்தொகுப்பில் உள்ளது.

இராமனின் வில்லும் பேசும் என்பதை இராவணனே பதினேழு பாடல்களில் ஒப்புக்கொள்கிறான். இதை விளக்கும் கட்டுரை 'வில்லும் சொல்லும்.'

கம்பராமாயணப் பெண் பாத்திரங்களின் சிறப்பை, ஆற்றலை விளக்கி ஒரு கட்டுரை அமைந்துள்ளது.

பேசாமல் பேசி, நிகழ்வைப் புரிந்துகொள்ள வைக்கும் ஆற்றல் கம்பனுக்கு உண்டு என்பதைச் சான்றுகளுடன் எடுத்துக்காட்டும் கட்டுரை பேராசிரியை அவர்களின் புலமைக்குச் சான்று.

டாக்டர் சரசுவதி இராமநாதன் அவர்களின் அரிய திறனாய்வுப் பேருரைகள் காற்றோடு போகாமல் எழுத்தாக வேண்டும் என்ற எங்கள் பெருவிருப்பம் இந்நூல் மூலம் நிறைவேறுகிறது. இத்தொகுப்பை எமக்கும் தமிழ் இலக்கியத்திற்கும் அளித்துள்ள பேராசிரியை அவர்களுக்கு மிக்க நன்றி.

– ஏ. திருநாவுக்கரசு
வானதி பதிப்பகம்

# என்னுரை

'உன்னால் முடியும்' என்ற எம்.எஸ். உதயமூர்த்தி ஐயா என் வழிகாட்டி. சிறுவயதில் படி, படி என்று படிக்க வைத்த என் கணவர், என் ஆசான் கம்பன் அடிப்பொடி, என் ஞானகுரு தமிழ்க்கடல் இவர்களை என் உயிர் உள்ளவரை மறவேன். காற்றிலே போகும் பேச்சு எழுத்தாக வேண்டும் என்று எழுத வைப்பவர் "வானதி" அண்ணா. "மூன்று நாளில் கம்பனில் ஒரு நூல் வேண்டும்" என்றார்.

எழுந்த ஞாயிறு விழுவதன் முன் 700 கவி பாடக் கம்பனா நான்? மூச்சுவிடுமுன் 300 பாடக் காளமேகமா நான்? 'பாரதி சின்னப்பயல்' என்றதும் வெண்பாப் பாட நான் அந்தக் கவிராஜ சிங்கமா? கதைக் கருவைக் கூறியதும் 10, 12 பல்லவி தர நான் கவியரசரா?

சிறு வயது முதல் இராமநாடகக் கீர்த்தனைப் பாடல்களைப் பாடுவேன். இராமாயணச் சொற்பொழிவுகளில் நிறையப் பாடல்களை எடுத்தாள்வேன்.

இசையும், கம்பனும் தெரிந்த என்னால் 'கம்பனும் கவிராயரும்' என்ற நூல் எழுத முடியும் என்று துணிந்தேன்.

புதுவைக் கம்பன் கழகம் புலவர்களின் வேடந்தாங்கல். ஃபாருக் மரைக்காயர் ஐயா, வெங்கடசுப்பா ரெட்டியார் ஐயா, கோவிந்தசாமி ஐயா, முருகேசன் அண்ணா, அருணகிரி அண்ணா என்று எங்களைப் போன்ற புலவர்களை ஆதரித்தவர், ஆதரிக்கின்றவர் நிறைந்த புதுவையில், சாதனைகள் பல செய்யும் புதுவைக் கம்பன் கழகத்தின் சார்பில் இந்நூல் வானதி பதிப்பகத்தின் மூலம் வெளியிடப் பெறுவது என் பேறு.

கம்பன் வாழ்க!
கம்பன் புகழ் வாழ்க!
கன்னித்தமிழ் வாழ்க!

கம்பனடிப்பொடி நாமம் வாழ்க!

– டாக்டர் சரசுவதி இராமநாதன்

# பொருளடக்கம்

உலகமாதாவின் அன்புப் பார்வையில் மகள் நூலாசிரியை.

திரு.ஆர்.எம்.வீரப்பன், திரு.வி.என்.சிதம்பரம், திரு.நல்லி குப்புசாமி செட்டியார், அட்வகேட் ஜெனரல் திரு.சந்திரன் ஆகியோருடன் நூலாசிரியை.

கர்நாடக சங்கீத பிதாமகர் செம்மங்குடி வாழ்த்துகிறார்
பொன்னாடைபோர்த்தி.

“கம்பனடிப்பொடி” விருது வழங்கும் விழாவில் ஜஸ்டிஸ் இஸ்மாயில்,
கவிஞர் வாலியுடன் நூலாசிரியை.

# 1. கம்பரும் கவிராயரும்

உலகில் சிறந்த உயர்தனிச் செம்மொழி தமிழ். இது உலகறிந்த உண்மை; வெறும் புகழ்ச்சியில்லை. "தமிழ் மொழி போல் இனிதாவது எங்கும் காணோம்" என்று மார்தட்டிச் சொன்னார் மகாகவி பாரதி. தமிழுக்குச் சாகா வரம் அளிக்க மாகாவியம் தந்தவன் கம்ப நாடுடைய வள்ளல். விழுந்த ஞாயிறு எழுவதன் முன், வான்மீகியின் காப்பியத்தைக் கேட்டு, எழுந்த ஞாயிறு விழுவதன் முன், எழுநூறு கவிபாடிய வண்டமிழ் வள்ளல், கவிச்சக்கரவர்த்தி கம்பன்; அது மொழி பெயர்ப்போ, மென் தழுவலோ, என்றில்லாது தன்புகழ் நிறுத்திக் கம்பராமாயணம் என்று ஆக்கிய கவிவலவன். விரலசைவில் விருத்தங்கள், விழியசைவில் சந்தங்கள், விரைந்துபாடி வரைந்து தந்த கம்பன் எண்ணி எண்ணித் திட்டம் போட்டா எழுதினான்? எண்ணாமலே எங்கிருந்தோ கொட்டினானா? மால்கடிந்த தவமுனி வால்மீகி தந்த பலா, பால் படிந்து, முள்ளடர்ந்து, பருத்து நீண்டதாக இருந்த கனி. அதன் பிசின் அகற்றி, மெள்ளக் கீறி, சுளை எடுத்து, தேன் வார்த்துத் தந்தவன் கம்பன் என்பது நாமக்கல்லாரின் அனுபவம்! கம்ப மா காவியத்தின் ஏற்றம், கம்பனின் ஆற்றல், தமிழன்னையின் நோற்றல், எல்லாம் தமிழரின் பேறாயிற்று.

## நதியின் வளம் நற்கவிதை நலம்

"புவியினுக்கு அணியாய் ஆன்றபொருள் தந்து புலத்திற் றாகி,
அவியகத் துறைகள் தாங்கி, ஐந்திணை நெறி அளாவிச்
சவியுறத் தெளிந்து, தண்ணென் ஒழுக்கமும் தழுவிச் சான்றோர்
கவியெனக் கிடந்த கோதா வரியினை வீரர் கண்டார்"

(2732)

இப்பாட்டில் நதியின் வளமும், நற்கவிதையின் நலமும் பேசப்படுகின்றன.

இலக்கியம், நதி – இரண்டுமே நாடு முழுமைக்கும் பயன்தர வேண்டும். உறுதி பயக்க வேண்டும். உறுதிப் பொருளைக் கவிதை தரவேண்டும். ஒண்பொருளை நதி தரவேண்டும். அறிவுப்புலத்திற்குக் கவிதை உரமூட்ட வேண்டும். நதி புலப்படும்படி ஓடவேண்டும். தமிழின் சிறப்புக் கூறான அகத்துறை கவிதைக்கு அழகு. நதிக்கோ, நீராடும் துறைகள் அழகு. ஐந்திணை ஒழுக்கமும் நற் கவிதையின் நாட்டம் என்றால், ஐந்திணை நிலத்திலும் நதியின் ஓட்டம்; தெளிவாக இருப்பது கவிதை, நதி நீர், இரண்டிற்கும் மதிப்பு. ஒழுக்கத்தைப் போதிப்பது நல்ல கவிதை. ஒழுக்கம், பண்பாட்டை வளர்ப்பது நதி. நதிக் கரைகளே உலக நாகரிகத் தொட்டில்கள். (நைல் நதி நாகரிகம், சிந்து நதிக்கரைச் சமவெளி நாகரிகம் என்று வரலாறு கூறும்.)

ஒரு நல்ல கவிதை எப்படி இருக்க வேண்டும் என்ற இலக்கணம் தந்த கம்பன், தன் கவிதையே அதற்கு இலக்கியம் என்று காட்டிவிட்டான். இலக்கிய உலகில் தன்னேரில்லாத் தலைவன் கம்பன். கல்வி சிறந்த தமிழ்நாடு என்று பாடிய பாரதி, அதற்கு என்ன சான்று தருகிறீர்கள் என்று யாராவது கேட்பார்களே என்று உடனே அடுத்த அடியில், "புகழ்க் கம்பன் பிறந்த தமிழ்நாடு" என்று பாடி விட்டார்.

## கம்பன் யார்?

"பத்தாயிரம் கவிதை முத்தாக அள்ளி வைத்த
சத்தான கம்பனுக்கு ஈடு – இன்னும்
வித்தாக வில்லைஎனப் பாடு" –

என்றார் கவியரசர் கண்ணதாசன்.

"காலமெனும் ஆழியிலும்
காற்றுமழை ஊழியிலும் – சாகாது
கம்பனவன் பாட்டு –அது
தலை முறைக்கும் எழுதி வைத்த சீட்டு"

என்பது சரியான கணிப்புத்தான்.

புதுவைக் கடற்கரையில் நின்று, "வேதப் பொருளை 'ஓம்' எனும் நாதத்துடன் கூறுகிறதென்று வியந்தார் பாரதி. அலைகடலின் கம்பீரம், மலையின் உயர்ச்சி, தென்றலின் இனிமை, இவை எல்லாமே கம்பனின் கவிதையில் காணமுடிகிறது. பின் வந்த கவிஞர் பலருக்கும் கவிச்செல்வம், கற்பனைச் செல்வம் வாரி வழங்கிய வள்ளல் கம்பன். பின் வந்த இளைய கவிஞர் பட்டாளம் கை நீட்டிய போதெல்லாம் கவிப்பிச்சை தந்த கவிஞன்.

"கம்பன் கொடுத்த கவிப்பிச்சை ஓரளவு" என்று கண்ணதாசன் வாக்குமூலம் தந்துள்ளார். அத்தகைய கவிவள்ளலின் வாழையடி வாழை என வந்த வாரிசுகளில் சீர்காழி அருணாசலக்கவிராயர் ஒருவர். தனிச் சிறப்புப் பெற்ற ஒருவர்.

மூன்று என்ற எண் எத்தனையோ சிறப்புப் பெற்றது: முச்சங்கம், முத்தமிழ், மூன்று (தமிழ்) நாடு, மூவகை உறுதிப்பொருள் (அறம், பொருள், இன்பம்), மூவேடணை (பிள்ளைப்பாசம், மனைவிமீது ஆசை, பொருட் பற்று), மூவகைக் குற்றம் (ஆணவம், கன்மம்,

மாயை), மும்மூர்த்திகள் (அயன், அரி, அரன்), சங்கீத மும்மூர்த்திகள் (ஸ்ரீதியாகராஜர், முத்துசுவாமி தீட்சிதர், சியாமா சாஸ்திரிகள்), தேவார மூவர் (அப்பர், சம்பந்தர், சுந்தரர்), தமிழிசை மூவர் (சீர்காழி அருணாசலக் கவிராயர், முத்துத்தாண்டவர், மாரிமுத்தாபிள்ளை)

இந்தத் தமிழிசை மூவரில், கம்பனைக் கற்று, இராம காதையில் தோய்ந்து, அதை இசை நாடகக் கீர்த்தனை யாக வழங்கிய கவிராயரைக் கம்பனின் இலக்கிய வாரிசு என்று கொள்வதில் தவறில்லையே!

கம்பன் சோழநாட்டுத் தேரெழுந்தூரில் அவதரித்த அபிநவகவிநாதன். அவனுக்கு ஆதரவளித்து கம்ப ராமாயணம் எழுத வைத்தவர் கதிராமங்கலம் என்ற வெண்ணெய்நல்லூர்ச் சடையப்ப வள்ளல்; நாட்டரசன் கோட்டையில் அமைதி கொண்ட பாட்டரசன் அவன் என்பது தவிர முறையான வரலாறு எதுவும் கம்பனைப் பற்றிக் கிடைத்திலது. கதைகள் ஏராளம்!

**கவிராயர் யார்?**

அண்ணல் காந்தி, இதுவரை உலகம் கண்டிராத மகாத்மா. கத்தியின்றி இரத்தமின்றி யுத்தம் நடத்தி, சத்தியம், அஹிம்சை இவற்றின் வலிமையை உலகுக்குக் காட்டிய உத்தமர். அவரது அழைப்பை ஏற்று விடுதலை வேள்வியில் குதித்த பல லட்சம் தொண்டர்களில் சில மகளிரும் இருந்தனர். சோழ நாட்டுத் தில்லையாடியி லிருந்து வள்ளியம்மை என்னும் மாதரசியும் அந்த விடுதலைப் போரில் ஈடுபட்டார். அந்தத் தில்லையாடி தான் அருணாசலக்கவிராயர் பிறந்த ஊர்.

“சோழவளநாடு சோறுடைத்து” என்றால் சோறு நிறைந்தது என்று மட்டுமா பொருள்? சோற்றுக் கவலை யில்லாமல் இருந்தால் பிற கலைகள் சிறக்கும். “சோற்றுச்

செருக்கல்லவோ தமிழ் மூன்றுரை சொல்வித்ததே" என்றாற்போல், சோர்வில்லாத சொல்வளம் பெறச் சோற்று வளம் தேவைதான். காவியத்தாயின் தலைமகன் கம்பனை ஈன்ற சோழநாடுதான் இன்றைக்கு 250 ஆண்டு கட்கு முன் அருணாசலக் கவிராயரையும் தந்தது. தமிழ் வளர்க்கும் தருமை ஆதீனத் தம்பிரான் சுவாமியிடம் தெலுங்கு, கிரந்தம், தமிழ் இவற்றைக் கற்ற கவிராயர், உலகப் பொதுமறையாம் திருக்குறளில் பெரிதும் ஈடு பட்டார்.

"எப்பொருளும் யாரும் இயல்பின் அறிவுறச்
செப்பிய வள்ளுவர்தாம் செப்பவரும் – முப்பாற்கு
பாரதம்சீ ராமகதை பழையமனுப் பண்டைமறை
நேர்வனமற் றில்லை நிகர்"

என்ற திருவள்ளுவ மாலைப் பாடலைப் பயின்றபோது இராமகாதையின் சிறப்பறிந்து கம்பராமாயணத்தை அநுபவித்துக் கற்றார். சீரிய, கூரிய, தீஞ்சொல் வெளவிய, செவ்விய, மதுரஞ் சேர்ந்த, கம்பனது பாக்கடல் அமுதத் திற்குப் பாற்கடல் அமுதும் நிகரில்லை என்றுணர்ந்தார். பல மேடைகளில் இராமாயணப் பிரசங்கம் இசையுடன் சேர்த்துச் செய்து மக்களிடையே பரப்பினார்.

இல்லறத்தில் இருந்தாலும், உலகியலுக்காகப் பொன் வெள்ளி விற்கும் காசுக்கடை வைத்திருந்தாலும் கவி ராயரின் மனம் தமிழின்பத்திலேயே திளைத்திருந்தது. தருமபுர மடத்தில் அம்பலவாணக் கவிராயரிடம் சிறப்பான தமிழ் இலக்கிய இலக்கணங்கள் கற்றுத் தேர்ந்தார்.

## புதுவைத் தொடர்பு

சீர்காழி வழியாகப் புதுவை வந்து, பொன், வெள்ளி கொள்முதல் செய்ய வந்த நாம் கவிராயர் (தருமபுர

மடத்தின்) சீர்காழிக் கட்டளைத்தம்பிரான் சிதம்பரம் பிள்ளையைக் கண்டு அடிக்கடி அவருடன் தங்கித் தமிழ் நூல்களைக் குறித்து விமரிசனங்கள் செய்து மகிழ்ந்தார். ஒரு நாளிரவுக்குள்ளே "சீர்காழிப்பள்ளு" என்ற நூலை நம் கவிராயர் இயற்றித் தந்தார் எனின் இவரது புலமைக்கு வேறு சான்று தேவையா?

தம்பிரான் சுவாமி, இவர் குடும்பத்தாரையே சீர்காழி நகருக்கு அழைத்து வர வைத்தார். சீர்காழி அருணாசலக்கவிராயர் ஆனார் தில்லையாடிக்காரர்.

கம்பன், சரசுவதி அந்தாதி, சடகோபர் அந்தாதி, ஏர் எழுபது என்று பல நூல்கள் தந்திருந்தாலும் இராமா வதாரக் காப்பியமே அவரது நிலைத்த புகழுக்குக் காரணம் ஆனது. அதுபோலக் கவிராயரும் சீர்காழித் தலபுராணம், சீர்காழிக் கோவை, அயோமுகி நாடகம், அனுமான் பிள்ளைத்தமிழ் என்று நூல்கள் பல எழுதி யிருந்தாலும் இராமநாடகக் கீர்த்தனை அவரது தனிப் புகழுக்குக் காரணமானது.

கம்பரது இராமகாதையைப் பாடல்களாக அது வரை யாரும் இயற்றித் தரவில்லை; பாடல்கள், படிக்காதவரும் புரிந்து பாட முடியும்; பெண்கள் கீர்த்தனைகளைப் பெரிதும் விரும்பிப் பாடுவர்; குழந்தை களுக்கும் சொல்லித் தருவர்; தம் நண்பர்களான வேங்கடராமய்யர், கோதண்டராமய்யர் இப்பாடல் களைப் பாடிப் பரப்புவர்; எனப் பல எண்ணங்கள் எழுந்ததால் இராமநாடகக் கீர்த்தனை எனும் இசை நூலை யாத்தார் கவிராயர்.

கம்பருடைய காப்பிய நிகழ்ச்சி அமைப்புக்களை அப்படியே அடி ஒற்றிப் பாடியது கவிராயரின் பெருமை! விருத்தம், கலித்துறை, கொச்சகம், வெண்பா,

தோடையம், வசனம், பாடல்கள் என்று மாறிமாறி வருவது அழகு! படிக்க, பாட, இரண்டிற்குமே ஏற்றது இராமநாடகம்: இக்காலத்தில் நடிக்க ஏற்றதல்ல என்பதும் உண்மை. இசை நாடகம் பார்க்கும் பொறுமை இந்தக் கணினி உலகில் குறைவுதானே! வரலாறு புகழும் புதுவை ஆனந்தரங்கப்பிள்ளை, கவிராயர் திறமைக்குப் பல வெகுமதிகள் தந்துள்ளார். மணலி முத்துகிருஷ்ண முதலியாரும் பல பரிசுகள் தந்துள்ளார்.

"சித்தி தருகின்ற வல்லி புத்தி தருகின்ற வல்லி,
தேவர்கள் வணங்கும் வல்லி
தில்லை நாயகவல்லி, சிவகாமவல்லி" யின் கருணையால்
"சத்திய வாசகன் என்று பூவுலகு துதிக்கும் சகலபாஷா
நிபுணர் மணலி முத்துகிருஷ்ணர்"

என்று கவிராயர் மணலியாரைப் போற்றுகிறார். தமது அறுபதாவது வயதில் இராமநாடகத்தை அரங்கேற்றிய கவிராயர் "அறுபத்தேழு வயதில் சீர்காழியிலேயே உலகைவிட்டுச் சென்றார். தமிழிசை மூவர் என்று உலகம் கொண்டாடும் மூவரில் அருணாசலக் கவிராயர் நிலைத்த புகழுக்குரியவர் ஆனார்.

## அரங்கம் – அரங்கேற்றம்

கவிச்சக்கரவர்த்திக்கும், கவிராயருக்கும் எத்தனையோ ஒற்றுமைகள் உள்ளன. இருவருடைய நூல் அரங்கேற்ற மும், திரு அரங்கத்திலேதான் நடந்தன. கம்பனது காவியம் அரங்கேறத் தடைகள் வந்தபோது, "நம் சடகோபனைப் பாடினையோ?" என அசரீரி கேட்டு "சடகோபர் அந்தாதி" பாடி, அதன்பின் இராமாவதாரத்தை அரங்கேற்றினார் கம்பர். 'ஏகம்பர்' என்பதன் முதற்குறை கம்பர் என்று ஆனது என ஒரு சாரார்

சொல்வர். கம்பத்திலிருந்து தோன்றிய நரசிம்மத்தின் பெயரால் கம்பர் ஆனார் என்பர் சிலர்.

"தருகை நீண்ட தயரதன் தான் தரும்
இருகை வேழத்து இராகவன் தன்கதை
திருகை வேலைத் தரைமிசைச் செப்பிடக்
குருகை நாதன் குரைகழல் காப்பதே"

என்ற பாடலைக் காட்டி நம்மாழ்வார் பக்தர் கம்பர் என்பர். கவிராயரின் நாடக அரங்கேற்றத்திற்கு முன் கனவில் ஒரு வைணவர் வந்து, "நம் பரிசனங்களைப் பாடியபின் நூலை அரங்கேற்றம் செய்க" என்றார். உடனே கவிராயர் அவையடக்கம் பாடி, அனந்த, கருட, விஷ்வக்சேனர், அனந்தாழ்வான், பஞ்சாயுதங்கள், ஆழ்வார், ஆச்சார்யர்கள், அனைவரையும் துதித்துப் பாடினார். கம்பனின் இராமகாதை அரங்கேறிய பங்குனி அத்த நாளில் கவிராயரின் இராம நாடகமும் அரங்கேறியது சிறப்பு.

நூற்பயன் சொல்வது மரபு என்பதால், கம்பர்,

"நாடிய பொருள் கை கூடும்; ஞானமும் புகழும் உண்டாம்;
வீடியல் வழிய தாக்கும்; வேரி அம் கமலை நோக்கும்;
நீடிய அரக்கர் சேனை நீறுபட் டழிய வாகை
சூடிய சிலைஇ ராமன் தோள்வலி கூறுவார்க்கே"

எனப் பாடினார். கவிராயரும்,

"ஞான நாயகனாம் ராமன் நாடகம் இசையால் சொல்லும்
கான பாகவதர் உள்ளம் களித்திட இதனைக் கேட்போர்
தானம்ஆம் உலகில் உள்ள சௌபாக்கியமும் பெற்றே நல்ல
வானநாட் டரசர் ஆகி வசீகரம் பெறுவர் தாமே!"

என்று பாடினார்.

## ஒரே பாடலில் கதை

சிலப்பதிகாரத்தைப் படிக்கும்போது "மாதவி மடந்தை கானற்பாணி கனகவிசயர்தம் முடித்தலை நெறித்தது" என்ற ஒரு வரியில் சிலம்பின் கதை முழுதும் வந்துவிட்டது என்றுணர்வோம். மாதவி பூம்புகார் இந்திரவிழாவில் கானல்வரி பாடினாள். ஐயமும் கோபமும் உந்தக் கோவலன் அவளைப் பிரிந்து கண்ணகியிடம் வந்தான். கண்ணகி சிலம்பைத் தந்தாள். மதுரை வந்தனர். சிலம்பு காரணமாகக் கோவலன் கொலையுண்டான்; கண்ணகி வழக்குரைத்து வென்றாள். கற்பின் கனலால் மதுரையை எரியூட்டிய பின் சினம் தணிந்து சேரன் வஞ்சியில் தெய்வ வடிவானாள். செங்குட்டுவன் இமயத்தில் கல் எடுத்துக் கங்கையில் நீராட்டி, அச்சிலையைக் காவா நாவிற் கனகவிசயர் முடிமீது ஏற்றி வந்தான். ஆகவே மாதவியின் கானல்வரி கனகவிசயரின் முடித்தலை நெறித்தது என்பது எத்தனை அழகு! ஒரு வரியில் இராமகாதையைச் சொல் என்றால் "அறம் வெல்லும் பாவம் தோற்குமெனக் காட்டியது இராமாவதாரம்" எனலாம். "விட்டான் இராகவன் பட்டான் இராவணன்" என்று விளையாட்டாய்ச் சொல்லலாம். நீடிய அரக்கர் சேனை நீறு பட்டழிய வெற்றி கொண்ட கோதண்டராமனின் சரிதையை அயோத்யா காண்டத்துக் கடவுள் வாழ்த்துப் பாடல் ஒன்றிலேயே முடித்துவிட்டார் வண்கவி வள்ளலான கம்பர்.

"வானின் றிழிந்து வரம்பிகந்த
　　மாபூதத்தின் வைப் பெங்கும்
ஊனும் உயிரும் உணர்வும் போல்
　　உள்ளும் புறத்தும் உளன் என்ப

கூனும் சிறிய கோத்தாயும்
கொடுமை இழைப்பக் கோல் துறந்து
கானும் கடலும் கடந்திமையோர்
இடுக்கண் தீர்த்த கழல் வேந்தை"

வானிலிருந்து இறங்கி வந்த கடவுள் அவதாரம் செய்து விளையாடினான் என்பது பாலகாண்டம். கூனும் (கூனியும்) சிறிய கோத்தாய் (சிற்றன்னை) கைகேயியும் கொடுமை செய்து வரம் கேட்டதால் முடி துறந்தது அயோத்யா காண்டம்; கானம் கடந்தது – ஆரண்ய காண்டம், கிட்கிந்தா காண்டம்; கடல் கடந்தது – சுந்தர காண்டம்; இமையோர் இடுக்கண் தீர்க்கத் தசமுகனுடன் போரிட்டு அவனைக் கொன்றது யுத்த காண்டம் என்று இராமாவதாரக் கதை ஒரு பாடலில் செறிவுடன் சொல்லப்பட்டது எனலாம்.

## ஏன் பள்ளி கொண்டீர்?

இறைவன் தூங்க முடியுமா! தூங்குவானா? யார் அவனை உறங்கவிட்டார்? கண்ணனவன் தூங்கி விட்டால் காசினியே தூங்கிவிடும் அன்றோ? அவனோ திருஅரங்கத்தில், காவிரிதிரைக்கரத்தால் அடிவருட, அனந்தன்மீது அறிதுயில் கொண்டுள்ளான். ஏன்? கவிராயரின் அற்புதமான பாடல் இது. பல இசைத் தட்டுக்களில் வெளிவந்துள்ளது பலரும் மேடையில் பாடுவது, நடனம் ஆடுவது. 'ஏன் பள்ளி கொண்டீர் ஐயா?' என்ற மோகன ராகப்பாடல். இதில் ஒரு சரணம்:

"கௌசிகன் சொல் குறித்ததற்கோ? அரக்கி
குலையில் அம்பு தெறித்ததற்கோ?
ஈசன் வில்லை முறித்த தற்கோ? பரசு
ராமன் உரம் பறித்ததற்கோ?

"மாசில்லாத மிதிலேசன் பெண்ணுடனே
வழி நடந்த இளைப்போ?
தூசில்லாத குகன் ஓடத்திலே கங்கைத்
துறை கடந்த இளைப்போ?
மீசுரமாம் சித்ர கூட சிகரந்தனில்
மிசை நடந்த இளைப்போ?
காசினிமேல் மாரீசன் ஓடிய
கதி தொடர்ந்த இளைப்போ?
ஓடிக்களைத்தோ – தேவியைத் தேடி இளைத்தோ?
மரங்கள் ஏழும் துளைத்தோ?
கடலைக் கட்டி வளைத்தோ? இலங்கை என்னும்
காவல் மா நகரை இடித்த வருத்தமோ
இராவணாதியரை மடித்த வருத்தமோ?
ஏன் பள்ளி கொண்டீர் ஐயா?"

இராமாயண நிகழ்ச்சிகள் இந்த ஒரு சரணத்தில் மோனை, எதுகை நயத்துடன், இயைபு அழகுடன் இசைக்குப் பொருத்தமாய் வந்து, சொற்கள் நடன மாடுவது புரிகிறதல்லவா? குமரகுருபரர் சொல் விற்பனமும் அவதானமும் சகலகலாவல்லி தருவாள் என்றார். அந்தக் கலைமகளே கம்பருக்கும் கவி ராயருக்கும் அருள்புரிந்திருக்கிறாள்.

## அவதாரம்

"பிறிதொரு குறையிலை" தசரதனுக்கு. தனக்குப் பின் தரணி காக்கத் தனயன் இல்லை என்பதே ஒரு குறை. அது பெருங்குறை. அதே நேரம் வானவர் திருமாலிடம் வேண்டுகின்றனர். என்ன கேட்டனர்? "கொலைத் தொழில் அரக்கர் கொடுமை தீர்க்க எப்போது வரப் போகிறீர்?" என்றுதான்!

ஐயிரு தலையினோன் தசகண்ட ராவணனின் கொடுமை அதிகமாகிவிட்டது.

"மசரதம் அனையவர் வரமும் வாழ்வும் ஓர்
நிசரத கணைகளால் நீறு செய்ய யாம்
கசரத துரகமாக் கடல் கொள் காவலன்
தசரதன் மதலையாய் வருதும் தாரணி"

என்று இறைவன் இரங்கி (இறங்கி) வர இசைகிறான். "தேவர்களே! நீங்கள் இது நாள் வரை வானவர். இனி வானரர்கள் ஆகுக. என் சங்கு, சக்கரம், பாயலான ஆதிசேடன் இவர்கள் தம்பிகளாக வருவர்" என்றும் அருளினான். தேவாதி தேவர் மகிழ்ந்து ஆடிப்பாடினர். பிரம்மன் நான் கரடித்தலைவன், எண்கின் வேந்தன், ஜாம்பவான் என்றான். இந்திரனோ நான் வாலி, அங்கதனாக வருவேன். சூரியன் என்தம்பி சுக்ரீவனா–கட்டும் என்றான். வாயுவின் அம்சம் மாருதி, அனுமன், என்றனர். இந்த வைகுந்தக் காட்சி அப்படியே நாடகக் கீர்த்தனையாகும் அழகைப்பாடி அனுபவித்து மகிழ்ந்துள்ளேன். நீங்களும் பாடிப் பாருங்களேன்

பல்லவி

அவதாரம் செய்திடுவீரே – நீங்கள்
அரக்கர் பயத்தை ஒழிப்பீரே!

அனுபல்லவி

கவன வாலியும் சுக்ரீவனும் ஆகிக்
கண்ணாயிரத் தோனும் கதிரோனும் கூடி *(அவதாரம்)*

சரணம்

சங்கமும் சக்ரமும் சேஷனும் பரிவாகத்
தம்பியர் ஆய்வரத் தானேநாம் பூலோகத்
துங்கனான தசரத ராஜன் குறைபோகச்
சுருக்காய் வருவோம் எவரும் அதன் முன்னாக *(அவதாரம்)*

கம்பனுடைய கருத்தை விடாமல், அப்படியே வழிமொழியும் திறம் போற்றற்குரியது.

'வளையொடு, திகிரியும், வடவை தீதர
விளைதரு கடுவுடை விரிகொள் பாயலும்
இளையர்கள் என அடிபரவ ஏகி நாம்
வளைமதில் அயோத்தியில் வருதும் என்றனன்'

*(திருஅவதாரப் படலம் 22)*

வளை – சங்கம்; திகிரி – சக்கரம்; கடுவுடைப் பாயல் – விடமுள்ள ஆதிசேஷனாம் படுக்கை.

## யாரோ? இவர் யாரோ?

நான் சிறுமியாக இருந்தபோது ஒரு முறை அரியக்குடி இராமானுஜ ஐயங்கார் கச்சேரி கேட்டேன். "யாரோ– இவர் யாரோ – என்ன பேரோ?" என்று பைரவியில் ஒரு தமிழ்ப்பாடலை மிக விரிவான சங்கதி போட்டுப் பாடியதைக் கேட்டு மகிழ்ந்தேன். எட்டு வயது மாணவி நான். அப்போதே தேவகோட்டையில் இசை பயின்றேன். என் இசையாசிரியர் காளையார்கோவில் சண்முக சுந்தரம் ஐயாவிடம் இந்தப் பாடலைக் குறித்து வினவினேன்.

"அடேடே, உனக்கு அந்தப் பாடல் சொல்லிக் கொள்ள ஆவலா? அது இராமநாடகக் கீர்த்தனை! ஐயங்கார் சுவாமி நல்ல தமிழிசைப் பாடல்கள் பாடித் தமிழிசை இயக்கத்திற்குப் பேருதவி புரிகிறார்" என்று உடனே 2 நாளில் எனக்கு அப்பாட்லைக் கற்றுத் தந்தார். கம்பன் கழகக் காரைக்குடி மேடையில் இராம நாடகப் பாடல்களுக்கும் நான் நடனம் ஆடியிருக் கிறேன்.

294

கன்னிமாடத்தில், பொன்னின் சோதியாக, தெய்வீக மலரின் நறுமணம் மேனியிலிருந்து வீச, தேன்போல் மொழிபேசி, செஞ்சொற் கவியின்பமாகப் பேரழகுடன் சீதாப்பிராட்டி மிதிலையில் நின்றிருந்தாள். முனிவன் முன்னே நடக்க, பின்னவன் இலக்குவன் பின்னே வர, நடையில் நின்றுயர் நாயகன் ஸ்ரீராமன் நடுவிலே நடந்து வந்தான். அன்னமாடும் துறையைப் பார்த்து நின்ற தேவியின் கண்களும், அண்ணலின் கண்களும் ஒன்றை ஒன்று உண்ணவும் நிலைபெறாது, உணர்வும் ஒன்றிட இருவரும் மாறிப்புக்கு இதயம் எய்தினர். கருங்கடல் பள்ளியிலிருந்து நீங்கிய தேவனும், கமலச்செல்வியும் காதல் கொண்டுவிட்டதாய் உலகில் நடிக்கின்றனர். பிரிந்தவர் கூடிவிட்டனர். பேச்சு மூர்ச்சையாச்சு!

சீதை ஆசைநோய்க்கு மருந்தில்லாமல் வாடினாள். ஸ்ரீராமனின் கருமை நிறத்தை விவரிக்கத்தான் கம்பன் எத்தனை வார்த்தைகளைப் பார்த்துப் பார்த்துப் பயன் படுத்துகிறான்? ‘கடலோ? மழையோ? முழுநீலக் கல்லோ? காயா நறும்போதோ? படர்பூங் குவளைநாள் மலரோ..? நீலோற் பலமோ? பானலோ?’ அவனுடை நிறம்போல மாலை இருட்டு வந்து மாதரசியின் மனத்தை மயங்கச் செய்கிறதாம்!

இங்கே இராமச்சந்திரனோ என் மனம் ஏன் ஒரு பெண்ணைப் பார்த்துப் பேதலித்தது? அப்படியானால் அவள் எனக்காகப் பிறந்தவளாக, கன்னியாகத்தான் இருக்கவேண்டும். இல்லாவிடில் என் மனம் அவளை எண்ணியிராதே! ‘ஏகும் நல்வழி; அல்வழி என்மனம் ஆகுமோ?’

பூண் உலாவிய பொற்கலசங்கள் என்
ஏண் இல் ஆகத்து எழுதல என்னினும்

வாள் நிலா முறுவல் கனிவாய் மதி
காணல் ஆவது ஓர் காலம் உண்டாம் கொலோ?

வண்ணமேகலைத் தேர், கண் இரண்டு, கதிர்முலை தாம் இரண்டு. நகை ஒன்று என்று கூற்றுவனுக்கு இத்தனை வேண்டுமா? என் உயிரை வாட்டுகின்றனவே! இப்படியெல்லாம் புலம்பிய இராமனின் நிலையைக் கவிராயர் பாடும் பாடல் இதோ:

பல்லவி

யாரோ – இவர் யாரோ? –என்ன பேரோ? அறியேனே!

(இவர் என்றார் – இவள் என்று பாடவில்லை. உரிமையல்லாத யாரோ ஒரு பெண் – அவளை ஏக வசனத்தில் இராமன் நினைக்கவில்லை – இவர் யாரோ – என மரியாதையாக நினைக்கிறார் என்பது கவிராயரின் பண்பாட்டுச் சிந்தனை)

அனுபல்லவி

கார்உலாவும் சீர்உலாவும் மிதிலையில்
கன்னி மாடந்தனில் முன்னே நின்றவர்

*சரணம் – 1*

பண்ணிப் பதித்தாற்போல் இருதனமும்
கூடப் பாங்கியர் இனமும், துரைத்தனமும்
எண்ணத்தானும், வண்ணத்தானும் பங்கயப்
பெண்ணைப் போலக் கண்ணிற் காணும்.

*சரணம் – 2*

சந்த்ர பிம்ப முக மலராலே – என்னைத்
தானே பார்க்கின்றார் ஒருக்காலே
அந்த நாளில் சொந்தம் போல உறுகிறார்
இந்த நாளில் வந்து சேவை தருகிறார்.

## கேளும் கேளும்!

கம்பனில் குலமுறை கிளத்து படலம் என்று பால காண்டம் 11ஆவது படலம் வரும். 29 பாடல்களில் இராமனுடைய குல முன்னோர் புகழ், தசரதன் பெருமை, ஸ்ரீ ராமனின் ஆற்றல், அவன் பிறந்ததால் உலகில் மங்கள ஒலி எழும்பிய மகிழ்ச்சி, தாடகைவதம், அகலிகை சாபவிமோசனம் இவையெல்லாம் பேசப் பெறுகின்றன. சொன்னவன் விசுவாமித்திரன்.

அலை உருவக் கடல் உருவத்து ஆண்டகைதன் நீண்டுயர்ந்த
நிலை உருவப் புயவலியை நீ உருவ நோக்கு ஐய!
உலை உருவக் கலை உமிழ்கண் தாடகைதன் உரம் உருவி
மலை உருவி மரம் உருவி மண் உருவிற்று ஒருவாளி

இந்தப் பாடல் சொல், பொருள், கற்பனை அழகு மிக்கது. ‘கோதமன்தன் பன்னிக்கு முன்னை உருக் கொடுத்ததிவன்’ என்றான் (பன்னி – பத்தினி என்பதன் மரூஉ).

சங்கராபரணம் ஆதிதாளம்

பல்லவி

யாரோ என் றெண்ணாமலே – நாளும் – இவன்
அதிசயங் களைச் சொல்லக் கேளும் கேளும்.

அனுபல்லவி

சூராதி சூரன் இராமன் என்னும் பேரன்
சுகுணதீரன் ரவிகுல குமாரன் இவனை

சிவன் அம்பால் உருண்டதே தாடகை காயம் மலை போல வந்தது பனி போலப்போனது என்பது விசுவா மித்திரரின் வியப்பு!

“துரத்தும் சாபம் அகலிகைக்குக் காலினாலே
துடைத்தானே அவள் உடல் மாசை சொல்லும்

பெருக்கம் என்ன இவன் பிறக்கவே உலகெங்கும்
பிறந்ததே மங்கள ஓசை – உங்கள்
பருத்தவில் இவன் கைக்குப் போதுமோ
போதாதோ என்று பார்க்க வேண்டும்
என்றோர் ஆசை!"

என்று ஒரே போடு போட்டுவிட்டான் விசுவாமித்ரன். வில்லை இவன் வளைப்பானா என்று நீங்கள் கவலைப் படுகிறீர்கள். நானோ இந்த வில் இவன் கைக்குப் போதுமா என்று யோசிக்கிறேன் – என்கிறான். இது கவிராயரின் தனித்த கற்பனை – அழகுதானே!

## "எப்படிப் பார்த்தாள்?"

ஒரு மங்கை நல்லாள் மணமேடைக்கு வரும் போது அவளது நடை, நாணம், அச்சம், மென்மை, பயிர்ப்பு இவை கலந்து, கால்கள் தள்ளாட, கண்கள் மருள, பின்னிப் பின்னி வருமல்லவா? அதற்கு ஏற்ற மென்மை யான சொற்களைப் பயன்படுத்தும் கவிவலவன் கம்பன். குகன் கோபமாக வரும்போது அதற்கேற்ற ஒலி தரும் வல்லெழுத்துக்களைப் பயன்படுத்துவான். கும்ப கருணனை உலக்கையால் குத்தி எழுப்பும்போது அதற் கேற்ற சந்தம் வருமாறு சொற்களைப் போடுவான். அதனால்தான், 'கம்பநாடன் கவிதையிற் போல் கற்றோர்க் கிதயம் களியாதே' என்ற மொழி எழுந்தது.

"பொன்னின் ஒளி, பூவின்வெறி, சாந்து பொதிசீதம்,
மின்னின் எழில், அன்னவள்தன் மேனிஒளி மான,
அன்னமும் அரம்பையரும் ஆரமிழ்தும் நாண,
மன்னவை இருந்தமணி மண்டபம் அடைந்தாள்" (1144)

வந்து வணங்கி நின்ற சானகியைக் கண்டதும் விசுவா மித்திரனுக்கு வியப்பு மேலிட்டது. "இதுநாள் வரை என்

இராமன் வில் வளைத்த பெருமையை, வீரத்தை, தோள் வலியையே நினைத்தேனே!

"நச்சுடை வடிக்கண் மலர் நங்கை" இவளைப் பெற, இவள் விழிஅசைவில் ஒரு வில்லையா, ஏழுமலையையும் கூட முறிப்பானே! "இச்சிலை கிடக்க; மலை ஏழையும் இறானோ?" என மனத்தில் எண்ணுகிறான். சீதையோ, உள்ளத்துள் நுழைந்த கள்வனை, கள்ளத்தனமாகப் பார்த்தாளாம். கைவளை திருத்தும் சாக்கில் கடைக் கண்ணால் பார்த்தாள் என்றான் கம்பன். வளையலைச் சரிசெய்யும் பாவனையில் ஓரப்பார்வையால் ஓராயிரம் கதை பேசிவிட்டாளாம். வளையல்களை இவள் சரி செய்வதை மற்றவர்கள் பார்த்திருக்கையில் இவளோ கண்வழி நுழைந்த கள்வனை, இராமனைப் பார்த்து வேர்த்திருந்தாளாம்.

> "ஐயனை, அகத்து வடிவே அல, புறத்தும்
> கைவளை திருத்துபு கடைக்கணில் உணர்ந்தாள்" (1153)

இனி, நாடகத்திற்குள் நுழைவோம்.

சாவேரி — ஆதிதாளம்

பல்லவி

அன்னை சானகி வந்தாளே – ராசாதிராசர்
அனைவர்க்கும் காட்சி தந்தாளே!

அனுபல்லவி

கன்னிமார் என்னும் தாரா கணத்தில் சந்திரனை நேரா
பொன்னும் மணியும்பூ மணமும் கொண்டு தொடர்ந்து
மன்னன் சனகன் மணிமண்டபம் தனிலே வந்தவள்,
'அந்த அமிர்தம் கண்ட இந்திரன்போலே – தாக
மாகிய ராமன் முன்னே தோகையர் நடுவாகக்
கந்தமலர்க் கைவளைச் சோதியினாலே ரண்டு

கடைக்கண்கள் கொண்டுராமன் வடிப்பங்கள்
கண்டு கொண்டு

(அன்னை சானகி)

கைவளை – கடைக்கண் எதையும் விடாமல் கம்பனைப் பின்பற்றிப் பாடும் கவிராயரே கம்ப ரசிகமணி தானே!

## அயோத்தியா காண்டம்

'கம்பனது பாத்திரங்கள் காலத்தின் சாத்திரங்கள்' இது கண்ணதாசன் செய்த தோத்திரம். பாத்திரங்களைக் கம்பன் அறிமுகப்படுத்தும் அழகே அழகு. தாரையை 'அமிழ்தில் தோன்றிய வேயிடைத் தோளினாள்' என்பார். கைகேயியைக் 'கடைக்கண் அருள்பொழியக் கிடந்தாள்' என்பார். சீதையைச் செஞ்சொற்கவி இன்பம் என்பார். சூர்ப்பனகையினை வஞ்சமகள் எனக் காட்டுவார். கூனியை,

"இன்னல் செய் இராவணன் இழைத்த தீமைபோல்
துன்னரும் கொடுமனக் கூனி தோன்றினாள்"

என்று காட்டினார். கூனி என்ற திருப்புமுனைதான் இராமாவதாரத் தேரை உரிய திசைநோக்கித் திருப்பியது அவளைச்

'சந்தானது போய் முடங்கிய காலி
சணல்போலே நரைத்துத் திரங்கிய தோலி
இந்திராதி தேவர்க்கு அனுகூலி
இலங்கை ராட்சதர் குடிக்கொரு நீலி

என்ற கவிராயரின் அறிமுகம் அருமை. தேவர்கட்கு நலம்பயக்க, அரக்கர் குடி மாள வந்தவள் கூனி!

தூமொழி மடமானான கைகேயி, பாற்கடலில் பவளவல்லிபோல் கிடந்தாள். கூனி, அவளைத் தீண்டி

எழுப்பினாள். எது தீண்டும்? பாம்பு தீண்டிற்று என்போம். கூனி எனும் நச்சரவம் தீண்டிப்பாலன்ன கைகேயியைக் கொடு விடமாக்கப் போகிறாளே!

இராமனுக்கு முடிசூட்டுவிழா நடைபெறப் போகிறது என்று கூனி சொன்னதும் முத்துமாலையைப் பரிசாகத் தருகிறாள் கைகேயி. கூனி கொதித்துப் பேசி, வெடித்து எழுந்து, மாலையை வீசி நிலத்தைக் குழிவிழச் செய்கிறாள்.

'அப்பொன் மாலையால்
குழித்தனள் நிலத்தை அக் கொடிய கூனியே!'

இவள் மாலையை வீசிய வேகத்தில் கைகேயியின் அந்தப்புரத் தரையில் குழி, பள்ளம் ஏற்பட்டது என்றால், இவள் மாதிரி ஒரிரு பந்துவீச்சாளர் நமது கிரிக்கெட் அணியில் இருந்தால், பேட்டும் (மட்டை), பேட்ஸ் மென்னும் என்ன பாடுபடுவார்கள்! கூனியைச் சினந்து கைகேயி பேசுகிறாள்; "கதிரவன் குலத்து மேலோர் உயிர் முதல்பொருள் திறம்பினும் உரை திறம்பார்." மூத்த வனுக்குத்தானே அரசுரிமை உண்டு என்கிறாள். இது பாடலாகிறது கவிராயரின் கற்பனையில்.

"இராமனுக்கு மன்னன் முடி தந்தாலே
நன்மை யுண் டொருக்காலே"

அவன் யார்?

"பரசுராமன் கர்வம் தீர்த்தவண்டி
நம்மை யெல்லாம் காத்தவண்டி
பட்டம் கட்ட ஏத்தவண்டி
நாலுபேரில் மூத்தவண்டி – இராமன்
அவன் என் கண்மணி"

இப்படிப்பட்ட தூய சிந்தை திரிந்ததே என்று வருந்துகிறோம். ஆனால் அரக்கர் பாவமும், தேவர்

இயற்றிய அறமும் தான் கைகேயி மனத்தை, தூய சிந்தையைத் திரியவைத்தன என்ற கம்பன் வாக்கு நம்மை அமைதி கொள்ள வைக்கிறது.

"இலக்குவன் சீற்றம்"

'சிங்கக் குருளைக் கிடு தீஞ்சுவை ஊனை—
நாயின் வெங்கட் சிறுகுட்டனுக்கு
ஊட்ட விரும்பினாளா'

கைகேயி என்று கொதித்த இலக்குவன்

புவிப்பாவை பாரம் கெடப் போரில் வந்தவரை
அவிப்பேன் – அவர் ஆக்கையை அண்டமுறக்
குவிப்பேன் – என் கோ – இராமனுக்கு முடி
கவிப்பேன் – என்று வெகுண்டு பேசிய

இலக்குவன் பேச்சைக் கவிராயர் பாடியுள்ள பாடலில் அதே உணர்ச்சிப் பெருக்கைக் காட்டியுள்ள பான்மை வியப்பிற்குரியது.

1. நானே லட்சுமணன் ஆனால் கொடுக்கிறேன் ராமனுக்கு மகுடம்

2. சேனைபேர் என்னோடெதிர்க்கட்டும், குதிக்கட்டும் சித்திரக்கணையால் வென்று அத்தனை பேரையும் கொன்று

குருடனைப் பார்த்து ராஜமுழி முழிக்கச் சொன்னாளா? சர்க்கரையும் மாவும் ஒண்ணாகுமா? இரவிமுன் பனிபோல எனை எதிர்த்தவர் பயந் தோடுவர். பகையரசர் தலைகளைப் பனங்குலை போல உதிர்ப்பேன். சுட்ட மண்ணும் பச்சை மண்ணும் ஒட்டுமா? எட்டிப் பறந்தாலும் ஊர்க்குருவி கருடன் ஆகுமா? இப்படிப், பழக்கத்திலுள்ள வாசகங்களை அடுக்கிச் சரணம் போடுகிறார் கவிராயர்.

## "தியாகத் தாய்"

"அறம்தானே என நின்றவள்" சுமித்திரை. ஒரு பேச்சு உடையாள் அவள். அவள் பேச்சில் அறம், திறம், உரம் எல்லாம் இருக்கும். இராமனும், இலக்குவனும் அத் தூய நங்கையின் பொன்னடி பணிந்தபோது, நிதானம் தவறாமல் மகனைப் பார்த்துப் பேசுகிறாள்.

"ஆகாததன்றால் உனக்கு அவ்வனம் இவ்அயோத்தி
மாகாதல் இராமன் நம் மன்னவன்; வையம் ஈந்தும்
போகா உயிர்த்தாயர் நம் பூங்குழல் சீதை – என்றே
ஏகாய்; இனி இவ்வயின் நிற்றலும் ஏதம்." (1751)

உனக்குக் காடுதான் இனி அயோத்தி. இராமன் இருக்கும் இடம்தானே அயோத்தி. இனி உன் தந்தை இராமன்தான். தாய் சீதையே. புறப்படு இங்கு நிற்காதே என்பதில் எத்தனை தெளிவு தெரிகிறது!

"ராமம் தசரதம் வித்தி மாம் வித்தி ஜனகாத்மஜா
அயோத்யாம் அடவீம் வித்தி கச்ச தூத யதா சுகம்"

என்ற வால்மீகியின் வாசகத்தை வழிமொழிந்தார் கம்பர் என்றால், கம்பனைக் கவிராயர் அப்படியே எடுத்தாள் கிறார்:

"தாயேசீதை உன் தகப்பன் இராமன்
இந்தத் தலமே வனமடா – லட்சுமணா
ஆயாசம் பாராதே எள் எனும்முன் எண்ணெய்
ஆகச் செய்து வாடா லட்சுமணா"

அத்துடன் விட்டாளா சுமித்திரை?

"இவன் பின்செல்; தம்பி எனும் படிஅன்று
அடியாரினின் ஏவல் செய்தி
மன்னும் நகர்க்கே இவன் வந்திடில் வா.
அஃதன்றேல் முன்னம் முடி! என்றாள்
வார் விழி சோர நின்றாள்!"

அண்ணனின் அருமைத் தம்பி நான் என்று ஆணவம் கொள்ளாது அடிமையாக ஏவல்செய். அவன் அயோத்தி மீண்டால் உடன் வா. இல்லையெனில், அவன் வரவில்லை எனில், பின் பிறந்த நீ முன்பு இறந்து விடு என்று கண்ணீர் பெருக்கினாளாம். அஃதன்றேல் (இராமன் வராவிடில்) என்று நினைக்கும்போது கண்ணீர் பெருக்கெடுத்தது போலும்.

"பின்னும் சடையும் மரஉரியும் காணவோ
ராமன் பிறகே வந்தேன் என்று – லட்சுமணா
குன்னமா எண்ணாதே!"

"கர்த்தன் ஆன ராமன் சித்தத்திலே எண்ணும்
கட்டளைப்படி நட"

என்ற சுமித்திரையின் நல்ல உள்ளத்தை வால்மீகி – கம்பர் வழியில் கவிராயரும் அழகாகப் படம் பிடித்துப் பாடியுள்ளார்.

## "பிரிவினும் சுடுமோ காடு?"

பெண்ணின் கைத்தலம் பற்றும் கணவன் அவளிடம் "எப்பிறப்பிலும் உனைக் கைவிடேன்" என்று சொல்கிறான். சொல்லவேண்டும்! "இம்மைப் பிரியலம்" என்று ஒரு தலைவன், (குறளில்), சொன்னானாம். உடனே தலைவி அழுதாளாம். "இம்மைப்பிரியலம் என்றால் மறுமையில் ... மறுமையில்... பிரிவீரோ" என்று கண்ணீர் விட்டாளாம். வனம் செல்லத் தயாராக மரவுரி தரித்த ஸ்ரீராமன், தேவியிடம் "நான் கருவி மாமழைக்கல் தடம் கண்டு வருவன். நீ வருந்தலை" என்கிறான். இதென்ன நியாயம்? கணவன் அருகே மனைவி இருப்பதுதான் தர்மம் எனத் தாய் கோசலையிடம் சற்று முன்பகர்ந்தவன், தாரத்திடம், "நான் செல்கிறேன். நீ

வருந்தாதே” என்றால் எப்படி ஏற்க முடியும்? நாயகன் மண் இழந்தான் என்று சீதை வருந்தவில்லை. கானகம் செல்கிறான் என்றும் கலங்கவில்லை. “நீ வருந்தாமல் இங்கிரு. நான் செல்கிறேன்” என்ற வெஞ்சொல் செவி சுடத் தேம்புகிறாள். என்னை “என்னை இருத்தி” என்றது? இதை உன்ன உன்ன உயிர் பதைக்கிறது. காடு காலைச் சுடுமே – இது கணவனின் பரிவு. நின் பிரிவை விட அக்காடு சுடுமா? கால் சுடுவது வேதனை என்றால் மனம், உயிர் சுடுவது அதைவிடக் கொடுமையே!

இது மனைவியின் நியாயமான வாதம்.

இனிப் பாடலுக்கு வருவோம்.

இரக்கம், கவலை இவற்றை முகாரி, சகானா, உசேனி, சுபபந்து வராளி இராகங்கள் காட்டும். உசேனி ராகத்தில் கவிராயர் இப்பாடலை அமைத்தது. அவரது இசைப்புலமையையும் காட்டுகிறது. சங்கீத மும்மூர்த்தி களை, தேவார மூவரை, அருணகிரிநாதரைப் போலத் தங்கள் பாடலைத் தாங்களே இசையுடன் பாடி யுள்ளனர் தமிழிசை மூவரும்.

‘நாளும் இன்னிசையால் தமிழ் பரப்பும்’ ஞான சம்பந்தர், ‘தமிழோசை பாடல் மறந்தறியாத’ அப்பர், ‘ஏழிசையாய் இசைப்பயனாய்’ ஆண்டவனைக் கண்ட சுந்தரர், ‘சந்தத் தமிழால் சங்கத் தமிழின் தலைமைப் புலவன் முருகனைப் பாடிய அருணகிரிநாதர், ‘நாத தனும் அனிசம் சங்கரம்’ என சப்தஸ்வரத்தால் நாத யோகம் செய்த தியாக பிரம்மம் ‘குருகுஹ’ முத்திரை யுடன் இசைவேள்வி நடத்திய முத்துசுவாமி தீட்சிதர், காமாட்சியே உகக்கும் பாடல்கள் தந்த சியாமா சாஸ்திரிகள், சிதம்பரேசனைப் பாடிப் பரவிய முத்துத் தாண்டவர், தில்லை அம்பலத்தே நாட்டம் கொண்ட

மாரி முத்தாபிள்ளை, இராமநாடகக் கீர்த்தனை தந்த அருணாசலக் கவிராயர், நந்தன் சரித்திரக் கீர்த்தனை யாத்த கோபாலகிருஷ்ண பாரதி, சர்வசமய சமரசக் கீர்த்தனை பாடிய வேதநாயகம் பிள்ளை இப்படிப்பட்ட பலரும் தங்கள் பாடலைத் தாங்களே இசையுடன் பாடியது வரலாறு காட்டும் உண்மை. அவர்கள் இலக்கியகர்த்தர்களாக இருந்ததுடன் இசைவாணர் களாகவும் இருந்தனர். வாக்கேயக்காரர்கள், சங்கீத வித்துவான்களாக இருந்ததால் பாடலின் பொருள், பாவம் இவற்றிற்கேற்ற மெட்டுப் போட்டனர்.

இன்று பாடல் எழுதுபவர் ஒருவர், இசை அமைப்பவர் மற்றொருவர், பாடுபவர் வேறு ஒருவர் என்ற நிலைதான் உள்ளது. அருணாசலக் கவிராயர் சீதை இரங்கி ஏங்கிப்பாடுவதான பாடலை உசேனி இராகத்தில் அமைத்துள்ளார்.

“எப்படி மனம் துணிந்ததோ? சாமி
வனம் போய் வருகிறேன் என்றால்
இதை ஏற்குமோ பூமி?

என்னை இட்டுக் கொண்டு போவதோ பாரம்?
இதுவோ ஆண் பிள்ளைக்கு வீரம்?

நாடி நீர் போயிருக்கும் வனத்தின்
பேர் சொல்ல வேணும் – அதை
நான் நினைத்துக் கொண்டிறந்தால் அங்கே
பிறக்கல் ஆம் காணும்”

கூடி நாம் உகந்திருக்கும் காடு
குறைவில்லா என் மிதிலை நாடு
காடு நீர் இல்லாத நாடு
கால்வையும் தெரியும் என் பாடு”

பேச்சு வழக்கும், இலக்கிய வழக்கும் இயைந்த ஒரு தனிநடை கவிராயருடையது. இட்டுக்கொண்டு போவது எனில், அழைத்துக்கொண்டு உடன் செல்வது என்று பொருள். கால்வையும் பார்க்கலாம், என்றால் என்னை விட்டு விட்டு ஒரு அடி எடுத்து வைத்துப் பாருங்கள். என் கதி என்னாகும். அப்போது தெரியும். இப்படி இயல்பான அடிகள் படித்தவர்–பாமரர் அனைவரையும் ஈர்க்குமல்லவா!

## "தோழமை என்ற சொல்"

பெரிய புராணத்தில் வரும் காளத்திவேடன் அன்பே உருவானவர். "கண்ணப்பன் ஒப்பதோர் அன்பு" என்னிடத்தில் இல்லையே என்று மணிவாசகர் உருகுவார். "கண்ணப்பா என்றருளும் காளத்தியப்பா" என்பார் வள்ளலார்

அவனைப் போன்ற அன்பு வடிவம் கங்கை வேடனான குகன். இராமாயணத்தின் பெருமை நான்கு ஏழானது; தசரதன் புதல்வரான இராமன், பரதன், இலக்குவன், சத்துருக்னன் என்ற நால்வர் குகனொடும் ஐவராகி, குன்று சூழ்வானான சூரியன் மகன் சுக்ரீவ னொடும் அறுவராகி, அரக்கோன் தம்பி வீடணனைச் சேர்த்து ஏழுபேர் ஆனார்கள்.

குகன் என்ன செய்தான்? ஓடம்தானே விட்டான்? என்பர் சிலர். ஆனால் தூய அன்பினன் அவன். எந்தப் பலனையும் இராமனிடம் எதிர்பாராமல் அன்பு காட்டவே வந்தான். பரிவொடு தேனும் மீனும் திருத்திக் கொணர்ந்தான். 'நாவாய் வேட்டுவன் நாயடியேன்' எனப் பணிந்தான். உன்னை இப்படிப் பார்த்த என் கண்ணைப் பிடுங்கிக் கொள்ளாத கள்வன் யான் என்று

ஏங்கிய அன்பினன். இலக்குவன் சொன்னதைக் கேட்டுப் பரதன்மீது கோபம் கொண்டிருந்தான். நால் வகைப் படை புடைசூழப் பரதன், இராமனை அழைத்துச் செல்ல வந்தபோது, குகன் எனப் பெயரிய கூற்றின் ஆற்றலான் கோபத்தால் துடித்து வீர வசனம் பேசுகிறான்.

கட்டிய சுரிகையன்; கடித்த வாயினன்
வெட்டிய மொழியினன்; விழிக்கட் தீயினன்
காட்டிய துடியினனாக வந்த குகன் – பரதனது
படையை எலிப்படை என்கிறான். நான் பாம்பு –
என் மூச்சுக்காற்றிலே இப்படை பறந்து போகுமே!

“ஆழ நெடுந்திரை ஆறு கடந்திவர் போவாரோ!
வேழ நெடும்படை கண்டு விலங்கிடும் வில்லாளோ?
‘தோழமை’ என்றவர் சொல்லியசொல் ஒரு சொல்லன்றோ?
ஏழமை வேடன் இறந்திலன் என்றெனை ஏசாரோ?” (2317)

“ஆடு கொடிப்படை சாடி அடித்தவரே ஆள
வேடு கொடுத்தது பார் எனும் இப்புகழ் மேவீரோ!
நாடு கொடுத்த என் நாயகனுக்கிவர் நாம் ஆளும்
காடு கொடுக்கிலர் ஆகி எடுத்தது காணிரோ?” (2324)

இன்னபல பாடல்கள் குகனுடைய வீர உரைகள் என வரும்!

“மன்னவனுக் கடிமை நான் என்று தெரியாமல்
வனத்தில் வந்தும் துரத்திப் பிடிக்க வந்தாரோ?
ஆழ நெடுந்திரைக் கங்கை ஆறு கடந்தாலும் என்ன?
தோழன் என்று ராமன் என்னைச்சொல்லி யருளியதொரு
சொல்லேனோ? சொன்னபடிக்கு
நில்லேனோ? நான் பிடித்த கை

வில்லேனோ? இவரைக்
கொல்லேனோ?
முறியேனோ – வளைதடிகொண்டு
எறியேனோ – தலைதலையாப்
பறியேனோ – கொல்ல
அறியேனோ – இவரைப்
பொடிப்பொடியா இடியேனோ?
வரஒட்டாமல் அடியேனோ?
வந்த மன்னரைப் பிடியேனோ?
என் சொல் முடியேனோ?

என்று இப்படிச் சொல்லும் ஓசையும் குகனின் சீற்றத்தை ஏற்றமுறக் காட்டுகிறது சிறப்பல்லவா!

## "ஆரணிய காண்டம்"

காடுறை வாழ்க்கையைக் கூடக் களிப்புடன் ஏற்று வாழ்ந்த நல்லவர்கள் இராமனும் சீதையும். அல்லை யாண்டமைந்த மேனி அழகனுக்கும் அவளுக்கும் இலக்குவன் செய்த பணிவிடைகள் தாம் எத்தனை! பர்ணசாலை கட்டுவது, சிறு தெப்பம் கட்டி இழுப்பது. கனி, கிழங்கு, கொண்டு வருவது, உறங்காது காவல் நிற்பது எனப் பலவிதத்திலும் நண்பனாய், மந்திரியாய், நல்லாசிரியனுமாய், பண்பிலே தெய்வமாய்ப் பார்வை யிலே சேவகனாய் விளங்கினான்.

இப்படியே மகிழ்ச்சியாக ஏழிரண்டாண்டும் சென்று இராமன் அயோத்தி சேர்ந்து முடிசூட்டிக் கொள்ளவா அவதாரம் எடுத்தான்? கொலைத் தொழில் அரக்கரின் கொடுமை தீர வேண்டாமா?

அதற்காகவே அடுத்த திருப்புமுனை ஏற்படுகிறது.

'பஞ்சிஒளிர் விஞ்சுகுளிர் பல்லவம் அனுங்கச்
செஞ்செவிய கஞ்சநிகர் சீறடியள் ஆகி,
அஞ்சொல் இள ம‿ஞை என அன்னமென மின்னும்
வஞ்சியென நஞ்சமென வஞ்சமகள் வந்தாள்' (2762)

அவள் இராவணனின் தங்கை.

'நீலமா மணி நிறத்து நிருதர் வேந்தனை, மூல நாசம்' செய்யவே வந்தவள். விளைகாமம் நிறை வாசத் தேனின் மொழி உற்று இனிய செவ்வி நனிபெற்று, மானின் விழி பெற்று மயில் வந்தது போல் வந்தாள். இராமன்மீது மையல் கொண்டாள்; பிதற்றினாள். சீதையைத் தூக்க முயன்று இலக்குவனால் மூக்கும் காதிரண்டும், வெம் முலைக் கண்களும் அறுபட்டாள். தலைமேல் கை வைத்து அலைகடல்சூழ் இலங்கைக்குச் சென்றாள். கதைதான் தெரியுமே! தசமுகனாம் அண்ணன் தங்கையின் அவலநிலைக்கு யார் காரணம் என்றபோது 'சீதை' என்றாள்.'

ஆழித்தேர் அவள் அல்குல்
கொங்கை செம்பொன்னால் செய்த செப்பு
பார் அவள் பாதம் தீண்டப் பாக்கியம் பெற்றது.

... காமரம் முரலும் பாடல்
கள் எனக் கனிந்த இன்சொல்

தாமரை இருந்த தையல் சேடி ஆம் தரமும் அல்லள்.

புகழ்வதற்கு என் உரை போதுமா?

மஞ்சு ஒக்கும் அளக ஓதி மழைஒக்கும் வடிந்த கூந்தல்.
பஞ்சு ஒக்கும் அடிகள்.

பவளத்தின் விரல்கள் கடலினும் பெரிய, கஞ்ச மொத்தலர்ந்த கண்கள்.

தோளைச் சொல்லவா?
சுடர் முகத்திரண்டு வாளைச் சொல்லவா?
வில் ஒக்கு நுதல் என்னவா?
விழி வேல் என்று கூறவா?
பல்லை முத்து என்று பேசவா?
நெல் போலப் புல்லும் இருக்கும்.
ஆனால் சுவை ஒக்குமா?
இந்திரனுக்குச் சசிதேவி கிடைத்தாள்.
சந்திரமௌலித் தலைவன் உமையைப் பெற்றான்.
சீதையை நீ பெற்றாய் என்றால்
நன்மை அவர்க்கே இல்லை உனக்கே ஐயா!

என்று முத்தாய்ப்பு வைத்தாள். கடைசி அடியை உற்றுப் பாருங்கள். நன்மை அவர்க்கில்லை, உனக்குத்தான் என்று வருவது போலிருந்தாலும் நலம் இல்லை உனக்கு என்று அறம் பாடுவதுபோல் தொனிக்கிறதே! அதுதான் கம்பனின் தனித்துவம்.

தசமுகனின் வீரம், வரம், பக்தி, பண்பு, மானம் எல்லாவற்றையும் சுருட்டிக்கொண்டு காமம் ஆக்கிர மிக்கப் போகிறது என இந்தக் கீர்த்தனை சுருட்டி இராகத்தில் அமைந்ததும் பொருத்தமே!

பல்லவி!

காண வேண்டும் லட்சம் கண்கள் – சீதாதேவி தன்
காலுக்கு நிகரோ பெண்கள்?

அனுபல்லவி

சேணுல கெங்கும் வாட்டித் திசை எங்கும் கீர்த்தி நாட்டித்
திரியும் இராவணா உன்தன் இருபது கண் போதுமோ?

*சரணம் – 1*

குவளை விழிகளோ பாணம் – அவள்தன் சொல்
கொண்டால் அதுவே கல்யாணம்
நவரத்னத் தங்கத் தோடு – நடையிலே அன்னப் பேடு
அவனிமேல் இல்லை ஈடு
அவளுக்கவளே சோடு – (காண)

அவளது தங்கக் கொடிபோல் இடையும
சீவி வகிர்ந்து
சாய்ந்த பின்னலின் சடையும் – எந்த
ஆடவனையும் நடை தளர்ந்து மெலியச் செய்யும்
அவள் 'தவமுனி ஒருத்தன் பெண்டு அவனுக்கேற்ற
தம்பி ஒருத்தன் அங்குண்டு
அவளே நல் ஐஸ்வர்யம்
அவளே நல்ல காம்பீர்யம்
அவள் வந்தால் அல்லவோ வீர்யம்!
அப்போது முடியும் உன் கார்யம்!'

சூர்ப்பனகை பேசுவதான கம்பன் பாட்டில், "நன்மை அவர்க்கு; இல்லை உனக்கு" என்ற குறிப்பு முரண்போலவே, அப்போது உன் காரியம் முடியும் என்று கவிராயர் சமத்காரமாக மொழிகிறார்.

## கிட்கிந்தா காண்டம்

அரிய காதலின் ஒருவரை ஒருவர் பிரிந்தால் அது விரக வேதனை! அதில் வேதனைக்கிடையே நினைப்பு ஒரு சுகம் தரும். வடநூலார் இதை விப்ரலம்ப சிருங்காரம் என்பர். சீதையைப் பிரிந்த ஸ்ரீராமன் தண்புனலில் நீராடினானாம். காய்ந்த இரும்பைக் கம்மியன் நீரில் தோய்த்ததும் அது சுட்டு ஆவி கிளம்புமே, அதுபோல் தண்ணீர் வெந்நீர் ஆனதாம். பூ ஒடுங்கின; புள்ஒடுங்கின பொழில்கள்.

மரங்கள் கூட இலை ஒடுங்கின.

கிளிகளின் நா ஒடுங்கின.

மயில்களின் நடம் ஒடுங்கின.

களிறு கூடப் பிளிறல் விட்டது.

மண் துயின்றது. மலைதுயின்றது. கழுதும் (பேய்) கண்துயின்றன. ஆனால் ஸ்ரீராமனின் கண்கள் துயிலை மறந்தன.

சக்கரவாகமே! அன்னமே! தாமரையே! குவளையே! மானே! மயிலே! மரகதக் குயிலே! பூவே! புள்ளே! பூங்கொடியே! என்று அனைத்துயிர்களையும், சடங் களையும் அழைத்துப் புலம்பலானான். "பஞ்சுபூத்த விரல், பதுமம் பவளம் பூத்த அடியாள், என் நெஞ்சு பூத்த தாமரையின் நிலையம் பூத்தாள்." அவளது கண்போன்ற குவளையே! நஞ்சு பூத்த நகை கொண்டு என்னை நலிவித்தல் முறையா?

இதையெல்லாம் மனத்தில் உள்வாங்கிய கவிராயர் பாடுகிறார்:

"கான்காள் வழிசொல்வீர் – இரு
கண்ணை விட்டுத் திரிவாருண்டு உயிர்போல்
பெண்ணை விட்டுப் பிரிவார்களும் உண்டோ?

"மயில்காள் ஒன்று சொல்லீர் – சொல்ல
வாய் இல்லையோ? உங்கள் சாயலை நேர்தரு
சேயிழையானவள் போய தெவ்வாறோ?

"குயில்காள் ஒன்று கூறீர் – சொன்னால்
குற்ற முண்டோ எனது உத்தமி யாகிய
பத்தினி சானகி எத்திசை போனாள்?

"கிளிகாள் உரையீரோ! ஒரு
கேள்வி கேளீர் படுபாவிகளே எனது
ஆவியை நேர்தரு தேவி வாராளோ?

"கோலமே என்ன கோலமே – வெகு
கொச்சையுமாய் மிகுலச்சையும் ஆய் – உயிர்
வைச்சிடவோ – இனி லட்சுமணா சொல்

இராமனது விரகதாபம் வார்த்தைகளில் அடங்குமா? இருப்பினும் படிப்பவர் மனம் அந்தச் சோகநிலையினை உணர வைப்பன கம்பனின் கவிதைகளும், கவிராயரின் பாடல்களும்!

## "மது விலக்கு"

'மதுவை விலக்கு இல்லாவிடில் விரைவில் நீ எமனுக்கு இலக்கு' என்று எத்தனையோ பேர் எத்தனையோ விதமாகச் சொல்லியும் குடிகாரர்கள் எல்லா நாட்டிலும் இருக்கத்தான் செய்கிறார்கள். குடியைக் குடித்தே ஒழிப்பேன் என்பது அவர்களின் விரதம் போலும். கள்ளுண்டார் நஞ்சுண்பவர்தாம். மதி கெட்டுத் தீமை புரிபவர்தாம். மானைப் போன்ற மானம், மதயானை நடை எல்லாம் மதுவால் தள்ளாடும். மனிதனை மிருகமாக்குவது மது. சொன்னால் யார் கேட்கிறார்கள்?

வாலி பலசாலி மட்டுமல்ல, அறிவாளி; வருவது உணர்ந்தவன். தான் வானுக்கு அப்புறத்தன் ஆகப் போகும்போது "ஸ்ரீராமா, நான் செய்தன பொறுத்தி" என்று தவறு செய்த தனக்கு மன்னிப்புக் கேட்டான்.

"உன் தம்பிகள் உன்மீது பாசம் மிக்கவர். என் தம்பி அண்ணனைக் கொல்ல ஆவல் காட்டியவன். என் தம்பியை உன் தம்பிகள் இகழாமல் பார்த்துக்கொள்.

என் தம்பி பூவியல் நறவம் (மது) மாந்திப் புந்தி வேறுற்றாலும் நீ என்மீது விட்ட அம்பை அவன்மீது போட்டு விடாதே!" என்றான். இராமன் மீது குறை கண்டு ஏசிப் பேசிய குரங்கு வாலி, தான் செய்தது தவறென்று உணர்ந்து மன்னிப்புக் கேட்ட போது மனிதவாலி ஆனான். தன்னை இப்படி ஆக்கிய தம்பிக்காகப் பரிந்து வரம் கேட்ட போது மகாத்மா வாலி ஆனான்.

கார் காலத்தில் மனிதர்களே குளிருக்காகக் குடிக்கிறோம் எனும் போது குரங்குகள் மதுக் குடிப்பது அதிசயமா? சுக்ரீவன் குரங்குதானே? முட்டக் குடித்து, மூடிப் படுத்து உறங்கிக் கிடந்தான். இராமனுக்குப் படையுடன் வருவதாகத் தந்த வாக்குறுதியை மறந்தான்.

கார் காலம் முடியும் வரை காத்திருந்த காகுத்தன், இப்போது கோபம் கொண்டான். சொன்ன கால எல்லையில் மன்னவன் வந்திலன்!

"பெறலரும் திருப்பெற்று, உதவிப் பெருந்
திறம் நினைந்திலன்; சீர்மையின் தீர்ந்தனன்.
அறம் மறந்தனன்; அன்புகிடக்க; நம்
மறம் அறிந்திலன்; வாழ்வின் மயங்கினான்" (4270)

"நன்றி கொன்று அரு நட்பினை நாரறுத்து
மெய்மை சிதைத்து, உரை பொய்த்தவனைக்
கொன்று நீக்குதல் குற்றமா?
நல்லறம் செய்ய நான் எடுத்த விற் கொம்பும்
உண்டு; அருங்கூற்ற மும் உண்டு"

என்று பலபடப் பேசிப் படபடத்தான். 'குணம் என்னும் குன்றேறி நின்றார் வெகுளி கணமேயும் காத்தல் அரிது' என்பது தெய்வப் புலவரின் சரியான கணிப்பு!

சாந்தமூர்த்தி, சற்குணசீலன் இராமனுக்கே கோபம் வந்தால் யார் எதிர் நிற்க முடியும்? இலக்குவனுடைய சீற்றத்தை மாற்றி, மடைமாற்றம் செய்து அருளாக்கிய சதுரன் அனுமன். வாலியின் மனைவி தாரையை இலக்குவன் எதிரே, அவனது தாய்மாரின் கைம்மை நிலையை நினைவூட்டும் வண்ணம் நிற்க வைத்தான். இந்த அழகு வால்மீகியில் இல்லை. குரங்குப் பெண்மை யிலும் கற்புத் திண்மையைக் காட்டிய தமிழர் பண்பாடு இது.

அமைதி அடைந்த இலக்குவனிடம் சுக்ரீவனை அழைத்து வந்தனர். 'நறவுண்டதால் நன்றி மறந்தேன் பேரிடரை விலைக்கு வாங்க இருந்தேன். காண நாணுகிறேன் மைந்த!'

நறவு உண்டு திகைக்கும் பித்தருக்கு நற்கதி உண்டோ? பகைவர், நட்டார் என்பது பார்க்காதது குடி. நன்றியை, முன்பு கற்றதை, கண்ணால் கண்டதை, மான அவமானத்தை, இதனால் வரும் துன்பத்தை எதையுமே உணரவிடாமல் தடுப்பது குடி! நஞ்சு கூடக் கொல்லுமே தவிர வேறு செய்யாது. கள்ளோ நரகத்தில் சேர்த்து விடுமே! நறவின் கேடுகளை உணர்ந்து விட்டேன். இனி 'நறவினை நான் அருந்தினால் வீரனின் செய்ய தாமரை அடிகள் என்னை மிதிக்கட்டும்' என்று பெரிய பிரசங்கமே செய்தான்.

இராமனிடமும் தன் தவறுக்கிரங்கி மன்னிப்பு வேண்டிப் பணிந்தான். கம்பனைப் போலக் கவிராயரும் மதுவை, அதன் தீமையைக் குறித்துப் பாடுகிறார்.

"மதுவே கெட்ட மதுவே
உன்னால் வந்ததிதுவே"

என்று கலங்குகிறான் சுக்ரீவன்.

“புதுமை நான் பாவி – சுக்ரீவன் எய்த
பூமி தந்தானுக்குச் சாமி துரோகம் செய்த–”
மதுவே கெட்ட மதுவே!

## சுந்தர(மான) காண்டம்

வால்மீகி, கம்பர் இருவருமே சுந்தர காண்டம் என்று பெயரிட்டது ஐந்தாவது காண்டம். இராம லட்சுமணர் பாலராக இருந்து, வளர்ந்து, விளையாடிய பருவம் பாலகாண்டம். அயோத்தியில் முடிசூட்டுக்கு ஏற்பாடு, கைகேயி வரம், ஸ்ரீராமன் சீதையுடன் வனம் சென்றது, இவை அயோத்தியில் நடந்த நிகழ்வு களாதலால் அயோத்யா காண்டம். ஆரண்யத்திலே முனிவர்கள், சடாயு சந்திப்பு, சூர்ப்பனகை வருகை, மாரீச மாயாவியின் நாடகம், சீதை பிரிவு இவை நடந்ததால் ஆரண்ய காண்டம். கிட்கிந்தையிலேயே நிகழ்ந்த நிகழ்வுகள் காண்டம் முழுவதும் வருவதால் கிட்கிந்தா காண்டம். யுத்தம் நடந்தது – யுத்த காண்டத்தில் பேசப்பெறுகிறது. ஐந்தாவது காண்டம் முழுவதும் இலங்கையில் நடந்த நிகழ்ச்சிகளே வருவதால் துளசிதாசர் ‘லங்கா காண்டம்’ என்று பெயர் சூட்டினார்; பொருத்தம்தான்!

1. சுந்தரமான, இலக்கிய அழகு நிறை காண்டம் சுந்தரகாண்டம்.

2. இராமனது அழகு சீதையிடத்தும், இராவணனிடத் தும், அனுமனிடத்தும் விரித்துரைக்கப்படுவதால் சுந்தர காண்டம்.

3. இராமனது வீர அழகு, உடலழகு, கருணை அழகு இவற்றைப் போலச் சீதையின் தவ சௌந்தர்யம்

பலபட அனுமனால் இராமன் முன் கூறப்பட்ட தல்லவா, ஆகவே சுந்தர காண்டம்.

4. சுந்தரன் என்றால் வானரன். வானரகுலத் தனிப் பெரும் தலைவனான அனுமன் புகழால் இது சுந்தர காண்டமாயிற்று. சுந்தர காண்டத்தின் கதாநாயகன் அனுமனே. கம்பனின் கவிக்கு நாயகன் இராமன். இராமகாதை எனும் நூல் தந்த கவிமன்னன், கவிக்கு நாயகன் கம்பனே! கவி (குரங்கு)க்குல நாயகன் அனுமனே! செவிக்குத் தேனாக இராமன் புகழைத் திருத்திய கவிக்கு நாயகன் அவன்.

## "திரிசடையின் கனவு"

அசோகவனத்தில் வன் மருங்குல் அரக்கியர் நடுவே மென் மருங்குலாள் சீதை இருந்தாள். பாறை போன்ற அரக்கியர் மத்தியில் சஞ்சீவிச் செடி போல் வாடி, அழகு மாசுபடிந்து இருந்தாள் பிராட்டி.

அயில் எயிற்று வெம்புலிக் குழாம் போன்ற இராட்சசிகள் மத்தியில் மயில் இளம் பேடை போல் மருண்டிருந்தாள் மதிவதனி. மேகக் கூட்டம் போன்ற அரக்கியர் நடுவே மின்னலை ஒத்து மெலிந்திருந்தாள் சானகி. சொல்லாது சொல்லும் நினைவுகள் சீதை உயிரைத் தின்னாமல் தின்று கொண்டிருந்தன. அவளுக்கு அங்கிருந்த ஒரே தோழி வீடணன் மகள் திரிசடையே!

சீதை துயில் எனக் கண்கள் முகிழ்த்தலும் இமைத்தலும் இலள். ஆகவே அவளுக்குக் கனவு வராது. திரிசடை ஒரு கனவு கண்டாள். சீதையிடம் அது குறித்து இயம்பினாள். "இயைந்த சோபனம்! நன்று இது

நன்று" என்று நல்வாக்குடன் தொடங்குகிறாள். "உன் காதில் பொன்னிறத்தும்பி வந்து ஊதிச் சென்றது. உன் நாயகனின் தூதன் ஒருவன் வரப்போகிறான். இராவணனாம் என் பெரியப்பா எண்ணெய் வடியும் தலையுடன், அரக்கு ஆடை அணிந்து, தென்திசை நண்ணக் கனவு கண்டேன். தெற்கு யமனுடைய திசை எனவே தசமுகன் மரணம் அடைவான். இராவணன் வளர்த்த ஓமத்தீ எரியாமல் அணைந்தது. இரவில் வானவில் வந்தது. கொடிகள் முறிந்து விழுந்தன. யானைகளின் தந்தங்கள் ஒடிந்தன. மண்டோதரியின் கூந்தல் விரிந்தது. ஆயிரம் மணிவிளக்கு ஏந்திய திருமகள் என் பெரியப்பாவின் அரண்மனையைவிட்டு நீங்கி என் தந்தை வீடணனின் அரண்மனைக்கு எழுந்தருளினாள். இந்த அளவில் நீ என்னை எழுப்பி விட்டாயம்மா!" என்றாள். சீதைக்கோ மேலே நடந்ததென்ன, தன் கணவன் தன்னை மீட்டு அழைத்துச் சென்றானா? அது குறித்துக் கவலை வந்தது. திரிசடையை இருகை குவித்து வணங்கி, "அன்னையே, துயின்று, மேற்கொண்டு கனவின் குறையைக் கண்டு சொல்" என்றாள். சோகம், தாபம் என்று வந்ததும் அறிவு மடம்படுகிறது. திரும்பத் தூங்கினால் கனவு தொடருமா!

இந்த நிகழ்ச்சியைச் சுருக்கமாக ஒரு பாடலில் கவிராயர் அமைக்கிறார்.

1. என் கனவைக் கேளாய் அம்மா
   சானகி அம்மா (என்)

2. மங்களம் உனக்குண்டாமே
   வல்லரக்கர் வாழ்வு போமே! (என்)

3. சுந்தரி மண்டோதரி
வெறுந் தலையைச் சீவினாள்
அந்திசந்தியில் அவள்
அழுது அழுது கேவினாள்.
இந்த மன்னன் மனைவிட்டு
எழுந்தொரு பெண் தாவினாள்
என் தகப்பன் வீட்டினில்
வந்துகந்து மேவினாள் –

ஒரு பெண் தலைவிரி கோலமாக நிற்பது அபசகுனம். தலையை இருபுறமும் விரித்துவிட்டு நிற்பது அவளது கணவனுக்கு ஆபத்து விளைவிக்கும். எண்ணெய் தடவாமல் தலை சீவுவது நல்லதல்ல என்று பெரியவர்கள் சொல்வர். இன்று இதையெல்லாம் யார் கேட்கிறார்கள்? நகரங்களைப் போலவே கிராமங்களிலும் நாகரிகம் 'தலைவிரித்து' ஆடுகிறது.

சுந்தரி மண்டோதரி வெறுந்தலையைச் சீவினாள்

அந்தி சந்தியில் அழுதழுது கேவினாள்

இலங்கை, இலங்கை வேந்தன் இவர்களுக்கு வரப் போகும் அவலமும் அழிவும் இரு வரிகளிலே சித்திரிக்கப்படுவது அருமை தான்!

அசோகவனத்திலிருந்த சீதைக்கு உயிர் தந்த உத்தமன் அனுமன்: இராம தூதனாக அறிமுகப்படுத்திக் கொண்டான். அவனை வாழ்த்திய பிராட்டி "ஐயனின் திருமேனி எப்படி இருக்கும்" என்று வினவினாள். இருபது பாடல்களில் இராமனின் திருவடி முதல் முடிவரை விவரித்து விட்டு என் உரை அளவிற்றோ ராமனின் பேரழகு! என்று அனுமன் விம்மி நின்றான். "ஐயோ! இவன் வடிவென்பதோர் அழியா அழகுடை யான்!" என்று கவிச்சக்கரவர்த்தியே திகைத்த இடம்

உண்டல்லவா? அரங்கனின் அழகு கண்ட ஆழ்வார் "நீலமேனி ஐயோ! நிறை கொண்டது என் நெஞ்சினையே!" என்று விம்மி நின்றது போலத்தான் கம்பனும் வார்த்தை இட முடியாமல் "ஐயோ!" என்று போட்டிருக்கிறான்! கவிராயர் அனுமன் கூற்றாகப் பாடும் பாடல் இதோ:

ராகம்: கேதாரகௌளை

பல்லவி

அந்த ராம சௌந்தரியம் என்னால்
அறிந்து சொல்லப் போமோ – அம்மா!

அனுபல்லவி

கந்த மேவும் அரவிந்த மலரும் அவர்
காலுக்கு நிகராமோ – கைக்குத்தான்
சொல்லப் போமோ?

சரணம்

உருண்டமணி முழங் காலுக்குவமை அவர்
உடைய அட்சயத் தூணி ஏற்குமே!
திரண்ட பெருந்துடை இரண்டுக்கும்
எட்டுத் திசை யானை துதிக்கையும் தோற்குமே!
வரிந்த மரவுரி இடையும் நடையும் கண்டோர்
மனத்தை எல்லாம் உருக்கி வார்க்குமே!
தரம் தரமாய் உலகிருந்த வயிற்றுக்கு நேர்
சரி சொல்லக் கூடுமோ யார்க்குமே!
விரிந்த மார்புக்கிணை பூமி அகலம் காணும்
விளங்கும் கழுத்துக்கு நேர் இளங்கமுகே பூணும்
பரந்த புயங்களுக்கு மேருமலையும் நாணும்
பார்க்கப் பார்க்கப் பதினாயிரம் கண்கள் வேணும்

கம்பனுக்கும் பாரதிக்கும் சொல்லை இசைத்துச் சுந்தரமாகப் பாடல் தர முடிந்தது. அதுபோலக்

கவிராயருக்கும் சொற்பஞ்சமே வந்ததில்லை! எத்தகைய இயல்பான மொழியில் எத்தனை பெரிய செய்திகளைக் கூறிவிடுகிறார்?

## “அசோக வனம்”

“அல்லற்பட்டு ஆற்றாது அழுத கண்ணீர்
செல்வத்தைத் தேய்க்கும் படையாகும்”

என்றார் வான் புகழ் வள்ளுவர். சீதை வடித்த கண்ணீரால் இலங்கை பாழாயிற்று கண்ணகியின் கண்ணீர் மதுரையை அழித்தது. பாஞ்சாலியின் கண்ணீர் கௌரவர் தலையை முடித்தது; 18 அக்ரோணி சேனை களையும் அழித்தது. கண்ணீர் கூரிய வாளை விடக் கடுமையான பலன்களைத் தரும். கூரம்பு, கொடுவாள் இரண்டையும் விடக் கண்ணீர்த்துளி விரைந்து பாய்ந்து பலன்தந்து விடும்.

‘மழைக்கண் என்பது காரணக்குறி என வகுத்தாள்’

என்று சீதை கண்ணீர் வடித்த நிலையைச் சுந்தர காண்டம் காட்டும். கண்ணீரால் நனைந்த அவள் ஆடையை வெப்பப் பெருமூச்சு உலர்த்தியதாம். இதற்குக் காரணமான இலங்கேசுவரனுக்குத் தன் ஆற்றலைக் காட்டித் தன் தலைவன் இராகவன் புகழையும் சொல்ல வேண்டுமெனச் சொல்லின் செல்வன் அனுமன் எண்ணினான்.

சோகத்தாளாய நங்கை இருந்தது அச்சோக வனம். அது எப்படி அசோக வனமாகும்? ஸ்ரீதேவி சோகப்பட்டு தேவாதி தேவர்க்கு அசோக (துன்பமற்ற) நிலையைத் தரத் தவம் செய்ததால் அது அசோக வனமாயிற்று. சுந்தரகாண்டக் கதாநாயகன் அனுமன் என்பேன்.

கடல்தாவு படலம் – யார் தாவினார்? அனுமான்
ஊர்தேடு படலம் – யார் தேடியது? அனுமன்
காட்சிப் படலம் – யார் காட்சி கண்டது? மாருதி
பொழிலிறுத்த படலம் – யார் பொழிலை இறுத்தார்? கவிக்கு நாயகன் ஆஞ்சநேயனே!

இப்படி, எல்லாப் படலத்திற்கும் எழுவாய் அனுமனே!

அனுமன் கடிகாவினை அடிக்கொடு துகைத்தான்

"முடிந்தன; பிளந்தன; முரிந்தன; நெரிந்த
மடிந்தன; பொடிந்தன; மறிந்தன; முறிந்த
இடிந்தன; தகர்ந்தன; எரிந்தன; கரிந்த
ஒடிந்தன; ஒசிந்தன; உதிர்ந்தன; பிதிர்ந்த. (5437)

கம்பனிடம் வந்தால் வெற்றுச் சொற்கள் கூட மகுடம் சூடி அரசு செலுத்தும். நொண்டிச் சொற்கள் கூடச் சதிராடும். இத்தனை வினை முற்றுக்கள் போட்டு ஒரு விருத்தம் பாடக் கம்பனைத் தவிர வேறு யாரால் முடியும்? இன்னொரு கம்பன் பிறப்பானோ? இப்படியும் கவி தருவானோ? கம்பனுக்கு மேல் ஓர் கவிஞன் பிறக்க முடியாது! கம்பனையன்றிக் கன்னித் தமிழின் சீர்மை முற்றுப்பெறாது. கவிராயர் கம்பனை அடி ஒற்றியே பாடும் இடங்கள் பல என்றேனே. அதிலே பின் வரும் பாடல் ஒன்று.

பியாகடை ராகம் ஆதிதாளம்

பல்லவி

அடித்தானே! அசோக வனம் தன்னை
முடித்தானே அனுமான்

சரணம்

ஆடச்சேயும் அசையச் சேயும்
அறுந்தன சிலமரங்கள் கைகளை

மூடச்சேயும் முறுக்கச் சேயும்
முறிந்தன சில மரங்கள்.

*(பேச்சு வழக்கில் ஆடறச்சே – அவன் நடக்கறச்சே என்று சோழநாட்டில் இப்படிச் சொற்கள் பயின்று வரும். அதை அப்படியே பாடலில் போட்டுவிட்டார் கவிராயர்.)*

ஆடும்போது, அசையும் போது என்று பொருள். வேர் பிடுங்கிச்

'சாடச்சேயும், தாவச் சேயும்
தறிந்தன சில மரங்கள். கொண்டாட்டம்
பாடச் சேயும், பாயச் சேயும்
பறிந்தன சில மரங்கள்.

குறைத்தான் சில மரத்தை
அணைபோல நிறைத்தான் சில மரத்தை
வெளி எங்கும் மறைத்தான் சில மரத்தை
வாரி வாரி இறைத்தான் சில மரத்தை

இராவணனிடம் நான் மூன்று கவடாய் முளைத் தெழுந்த முழுமுதலின் அவதாரமான ஸ்ரீராமனின் தூதன் என்றானே அனுமன், அதைக் கவிராயர் பாடுகிறார்

ராமசாமி தூதன் நானடா – அடடா
ராவணா! என்பேர் அனுமானடா?

*என்ன துணிவு! தூதனுக்குத் தூங்காமை, கல்வி, துணிவு மூன்றும் தேவை தானே!*

## திருவடி தொழுத படலம்

*சுந்தரகாண்டத்தின் நிறைவுப் படலம், 14ஆம் படலம், திருவடிதொழுத படலம். இதற்கு என்ன*

பொருள் எனப் பலரும் குழம்புவர். சிறிய திருவடியான அனுமன் தொழுத படலம் என்பர். யாருடைய திருவடியை அனுமன் தொழுதான்? இராமனின் அடியையா... இல்லையே!

"எய்தினன் அநுமனும், எய்தி ஏந்தல் தன்
மொய் கழல் தொழுதிலன்" (6028)

என்று அழுத்தமாகக் கம்ப நாடுடைய வள்ளல், கவிச் சக்கரவர்த்தி சொல்லி விட்டாரே! பின் திருவடி தொழுத படலம் என்பதன் பொருள்தான் என்ன? திருவின் (மகாலட்சுமியான தேவியின்) அடியை அனுமன் தொழுத படலம் என்பதே சரி! கம்பர் தரும் சாட்சி இதோ!

"முளரி நீங்கிய தையல் நோக்கிய தலையினன் கையினன்
வையகம் தழீஇ நெடிது இறைஞ்சி வாழ்த்தினான்" (6028)

ஆகவே திரு(மகள்) அடியிணை பணிந்து, திருவடி (சிறிய திருவடியான) அனுமன் வாழ்த்திப் பேசினான் என்பதுதான் கம்பரின் கருத்து. ஆயிரம் வார்த்தைகள் சொல்லிடினும் முடியாத அந்த அற்புதக் கருத்துக்களை அனுமனின் இந்த வணக்கமே காட்டிவிட்டது.

இவன் சீதையைக் கண்டதும் உண்டு; அவள் கற்பும் நன்று என்று ஞானவள்ளல் காகுத்தன் புரிந்து கொண்டான். எப்படி?

இந்த அனுமன் என்றும் வணங்கும் தலைவன் நான், இவன் எனக்கு நேரே காலை நீட்டினான். (ஸ்ரீராமன் தென்திசை நோக்கித்தானே அமர்ந்திருந்தான்.) மற்றத் திசைகளில் சென்ற வானரத் தூதுவர் எங்கும் தேவியைக் காணவில்லை. Nil Report என்ற செய்திகள் வந்துவிட்டன. தென்திசை சென்ற அனுமன் வரவு நோக்கித்தான் பெருமானின் உயிர் நிற்கிறது. சீதாப்

பிராட்டி தென்திசை இலங்கையில் இருக்கிறாள். இருக்கிறாள் என்பதல்ல; கற்புடன், தொழும் தகைமை யுடன் இருக்கிறாள் என்பதால் அப்பெருந் தெய்வத்தை வணங்கி, இத்தெய்வத்திற்கு எல்லாச் செய்திகளையும் குறிப்பால் உணர்த்திய அனுமனை எப்படிப் புகழ்வது? வார்த்தை போதுமா? வாழ்நாள் போதுமா? அவன் உலகுளதனையும் புகழொடும் ஓங்கி நிற்பான் அன்றோ? ஸ்ரீராமனும்,

" ஓங்கிய உணர்வினால், விளைந்தது உன்னினான்,
வீங்கினதோள்; மலர்க்கண்கள் விம்மின.
நீங்கியது அருந்துயர்; காதல் நீண்டதே!"

என்று முத்தாய்ப்பு வைத்தான் கம்பன் *(6030)*

## கண்டேன், கண்டேன்

"த்ருஷ்டா சிதா ச ஜானகி" பார்த்து விட்டேன் சானகியை என்று வால்மீகி முன்மொழிந்தார்.

"கண்டனன்" என்று அதன் வழிமொழிதலாக மட்டும் கம்பன் பாடவில்லை. "கற்பினுக் கணியை" எனவும் "கண்களால்" எனவும் அடுக்கியது காவிய உலகமே வியக்கின்ற ஒரு தொடர். ஐயமில்லை.

ஸ்ரீராமனின் உயிர் அனுமன் வரவிலும், சொல் லிலும் இருக்கிறது. பலப்பல வார்த்தை சோடனைகள் இப்போது காகுத்தனுக்குத் தேவையில்லை.

'கண்டனன்' – பார்த்துவிட்டேன் என்றான். யாரை, எப்படி, என்ன நிலையில் என்ற வினாக்கள் எழத் தேவையில்லாமல் 'கற்பினுக்கணியை' என்று ஆணி அடித்தாற்போல் புகல்கிறான் சொல்லின் செல்வன். அவள் கற்பினோடு, தவச்செல்வியாகத் தொழுவதற் கேற்றவளாக இருந்தாள் என்று செயலாலும்,

சொல்லாலும் உறுதி செய்துவிட்டான் கவிக்கு நாயகன். அது எப்படி உனக்குத் தெரியும் என்று கேட்க இடம் தராமல், "கண்களால் கண்டனன்" என்று முடித்து விடுகிறான்.

கண்களால் தானே எல்லோரும் காண்பர்? இது என்ன புதுச் சொல் அமைப்பு? 'கண்களால்' என்று போடவேண்டுமா?

அனுமன் கூற்றாக அப்படிச் சாதாரணப் பொருளில் கவிச்சக்கரவர்த்தி போடுவாரா?

1. 'ஸ்ரீராமா! உன்னைப் பரந்தாமன் என்று கிட்கிந்தையில் உன் கண்களை (பனிக்குத் தேம்பாக் கஞ்சம் ஒத்து அலர்ந்த கண்களை) வைத்துக் கண்டு பிடித்த என் ஞானக் கண்களால் சீதை கமலச் செல்வி என்றுணர்ந்தேன்.

2. நீ சொன்ன அடையாளங்களை எந்த உறுப்பிலும் நான் காணவில்லை. அருட் கண்களாலே அவள் பங்கயத் திருமகள் என்று கண்டேன்.

3. அரக்கியர் கள் குடித்துக் களித்த கண்களுட னிருந்தனர். பிராட்டி மட்டுமே கலங்கிக் கண்ணீர் ததும்பிய கண்களுடன் காட்சி தந்தார்.

4. உடல் உறுப்புக்கள் அனைத்தும் இளைத்து மெலிந்திருந்தன உன் தேவிக்குக் கண்கள் மட்டுமே இளைக்கவில்லை.

   'மென் மருங்குல் போல் வேறுள அங்கமும் மெலிந்தாள்' ஆன மைதிலியின் கண்கள் பெரிதாகத் தெரிந்தன. உடல் இளைத்தால் கண் மட்டும் பெரிதாகத் தெரியுமே! அதனாலும் கண்டேன்.

5. *ஸ்ரீ ராமச்சந்திர மூர்த்தி! பிராட்டியின் கண்களில் அசோக வனத்து மரங்களோ, அரக்கியர்களோ, நானோ, இராவணனோ தெரியவில்லை. நீ மட்டுமே, உன் சௌந்தர்யத் திருமேனி மட்டுமே தான் தெரிந்ததால் அவள் கற்பினுக்கு அணி எனக் கண்டேன்; தெளிந்தேன்; மகிழ்ந்தேன். இதுவே ஆனந்தத் தேன் என ஆனந்தித்தேன்! அனு பவித்தேன். உன்னிடம் பகர்ந்தேன்.*

"நைஸா பஸ்யதி ராக்ஷஸ்ய: நேமான் புஷ்ப பலத்ருமான்!
ஏகஸ்த ஹ்ருதயா நூனம் ராமம் ஏவ அனுபஸ்யதி."

என்ற வால்மீகி ராமாயண சுலோக்த்தை வைத்துப் பார்த்தால் மேற்சொன்ன ஐந்தாவது கருத்து மிகப் பொருத்தம். சீதை கண்களில் அரக்கர்களோ, பழங் களோ, மலர்களோ மரங்களோ தெரியவில்லை. ராமனையே அவள் கண்களில் காண முடிந்தது. ஆழ்வார்கள் வழியில் நின்று,

'பார்க்கும் மரங்கள் எல்லாம் நந்தலாலா
உன்றன் பச்சை நிறம் தோன்றுதடா நந்தலாலா'

என்று பாடிய பாரதியின் அனுபவம் கம்பனின் பாடலுக்கு விளக்கம் தரும்.

*சீதைக்கு அச்சம் போக்கிய அருமருந்து இராம நாமமே, அது சேமம் நல்குமே!*

*'சோகத்தாளாய நங்கையின் தவ அழகைத் தவம் செய்த தவமாம் தையல்' என்ற தொடருக்கு மேல் வேறு ஒரு தொடர் விளக்க முடியுமா? இவள் தவம் செய்யத் தவம் தவம் செய்திருக்கிறது!*

*இற் பிறப்பும், இரும் பொறையும், கற்பும் சீதை எனும் வடிவில் சேர்ந்திருந்தன.*

தையல் "கண்ணிலும் உளைநீ"

அவள் ...

"உம்பி புல்லினால் தொடுத்த தூயசாலையில்
இருந்தாள் ஐய!"

தசமுகன் "மண்ணொடும் கொண்டு போனான்"

என்று எத்தனை அழுத்தம் தந்து இராவணன் வைதேகியைத் தொடவில்லை என்று அனுமன் வாயால் உறுதிப்படுத்துகிறான் பாருங்கள்! சீதையின் கற்பு தொடாக் கற்பு. தசமுகன், தன்னை விரும்பாத பெண்ணைத் தீண்டினால் அவன் தலை வெடிக்கும் என்ற சாபம் உளது என்றெல்லாம் திரும்பத் திரும்பக் கூறுவதே சீதையின் கற்பு நிலையை அழுத்தம் திருத்தமாகக் கூறவே!

வால்மீகியின்படி சீதை முடியைப்பற்றி, தொடையில் பற்றிக்கொண்டு போனான் என்பது கருத்து. தமிழக மக்கள் கற்பின்கனலிக்கு அந்த நிலை வந்ததை ஏற்க மாட்டார் என்பதால், பிசினை அகற்றுவது போல், கம்பன் மாற்றிவிட்டான்.

"சீதைக்குத் தமிழ் நாட்டுச்
சேலையினைக் கட்டி வைத்தான்"

என்றார் கண்ணதாசன்.

இனிக் கவிராயரிடம் வருவோம்:

மூன்று முறை சொன்னால் 'முக்காலும் சொன்னேன்' என்று உறுதியாக, சத்தியமாக, அழுத்தமாகச் சொன்னேன் என்பது உலகியல். பெரியபுராணத்தில் கண்ணப்பர் இடதுகண்ணையும் இடந்து அப்பத் துணிந்தார். கையில் எடுத்த பகழி இடக்கண்ணருகே சென்றபோது, மூன்றடுக்காக நாக கங்கணர்,

*'நில்லு கண்ணப்ப,*
*நில்லு கண்ணப்ப,*
*நில்லு கண்ணப்ப'*

என்று சத்தமிட்டுத் தடுத்தார் என்பார் சேக்கிழார்.

*பல்லவி*

கண்டேன் கண்டேன் கண்டேன் சீதையைக்
கண்டேன் ராகவா!

*அனுபல்லவி*

அண்டரும் காணாத லங்கா புரியிலே
அரவிந்த வேதாவைத் தரவந்த மாதாவைக் (கண்டேன்)

*சரணம்*

காவி விழிகளில் உன்உரு ஒளிமின்ன
கனிவாய் தனிலே உன்திரு நாமமே பன்ன
ஆவித்துணையைப் பிரிந்த மட அன்னம்
ஆனால் நான் சொல்லுவ தென்ன
திடமா லட்சுமணன் செய் பர்ணசாலை வீட்டில்
தேவாதி தேவா உன் திருவாழி தனைக்காட்டி

நான் கற்பினுக்கரசினை, பெண்மைக் காப்பினை, பெண்ணற மூர்த்தியை, சனகன் பாவையை, காகுத்தன் தேவியை, தசரதன் மருகியை, என் போன்ற குரங்குக்கும் சிரஞ்சீவித்துவம் கொடுத்தருள் செய்த அமுதத் தாயைக் கண்டதே என் பாக்கியம்! அனுமன் பெற்ற பரவச நிலை வேறு யார்க்கு வாய்க்கும்?

**வந்தனம், ரகுநந்தனா!**

'மலையால் அணைகட்டி மறுகரை ஏறி' என்றார் ஆழ்வார். குரங்குகளுக்குப் பிரிக்கத்தானே தெரியும்!

அவற்றை வைத்து அணைகட்ட வைத்தவன் ரகுராமன்.

ஸ்ரீ தியாகராஜ சுவாமி 'வந்தனமு ரகு நந்தன சேதுபந்தன' எனப் பாடுவார். கடலரசன் இராமனிடம் பணிந்தான். அதற்குமுன் அரக்கர்கோன் தம்பி வீடணன் இராமன் கழல்பணிந்து அடைக்கலம் ஆனான். அடுத்தடுத்து இரண்டு சரணாகதி நடந்தது. வீடணனைச் சேர்த்துக் கொள்ளலாமா, கூடாதா என்ற பெரிய விவாதமே நடந்தபோது, அனுமன், வீடணனின் மேன்மைகளை அழகாகக் கூறினான்.

'மற்றினி உரைப்பதென்ன? மாருதி
வடித்துச் சொன்ன பெற்றியே பெற்றி'

என்று இராகவன் ஏற்றுக் கொண்டான். அதுமட்டுமா?

பலப்பல எடுத்துக்காட்டுக்களையும் ஸ்ரீராமன் கூறினான்!

இன்று வந்தான், நாளை வந்தான் என்பதெல்லாம் என்ன?

அடைக்கலம் என்று வருவதற்குக் காலம், இடம் உண்டா!

முதலை பற்றிய போது 'முதலே' என்றழைத்த யானைக்கு அருள் செய்யக் காலம் பார்த்தானா ஊழி முதல்வன்! மார்க்கண்டனான அந்தணச் சிறுவன் "சாதல் அஞ்சினேன்! அபயம்!" என்றபோது அரன் கூற்றுவனையே உதைத்த கருணை பெரியதன்றோ?

இன்னபிற கருத்துக்களை ஒரே பாடலில் கவிராயர் செறிவாக வைத்திருக்கிறார். சௌராஷ்டிரம் இராகத் திலமைந்த, இப்பாடல் மேடைகளில் பலரால் பாடப் பெறுவதைக் கேட்டிருப்பீர்கள்.

*பல்லவி*

சரணம் சரணம் என்றானே –
காவாதே விட்டால்
திரணம் அல்லவோ – நான்தானே!

*அனுபல்லவி*

அரிய வீபிஷணன் அங்கே
அரக்கன் ஆனாலும் இங்கே,
இருசெவி கேட்க வாய்விட்டு
இராகவா என்று கூப்பிட்டுச் – சரணம்

*சரணம்*

'சங்கரா! அபயம்!' என்றானே!
மார்க்கண்டன்; அரன், பொங்கிய காலனை வென்றானே!
வன்கையோய் இதென்ன வீர்யம்?
மாருதி சொன்னதே கார்யம்!
அங்கவன் வந்து என்னை மேவ
அழைத்துவா – போ – நீ – சுக்ரீவா – சரணம்

கடலரசன் பணிந்த பாடல் இதோ.

*பல்லவி*

சரணம் சரணம் ரகுராமா – நீ என்னைத்
தற்காத்தருள் பரந்தாமா!

*அனுபல்லவி*

விரிகடல் வேந்தன் உன் திருவடி சேர்ந்த என்
மேலென்ன அபசாரம்
ஆயிரம் நமஸ்காரம்!

'தாழ்கடல் இலங்கைச் செல்வம் உனக்கே தந்தேன்' ஏழினோடு ஏழாய் நின்ற உலகு, என்பெயர், இவை வாழும் நாள் வரை உனக்கே இலங்கை அரசு என

ஸ்ரீராமன் தந்தபோது 'அரசு' எனக்குப் பெருமையா, உன் அடி சூடும் அரசுதான் வேண்டும்; 'இளையவற் கவித்த மௌலி என்னையும் கவித்தி' என்றான்.

இராம நாடகக் கீர்த்தனை இதோ:

பல்லவி

இந்தா வீபீஷணா – லங்காபுரி ராஜ்யம்

அனுபல்லவி

இந்திராதி தேவர்கள்
உள்ளநாள் வரைக்கும் – இந்தா

வேதம் உள்ளளவும், வேத கீதம் உள்ளளவும்
பஞ்ச பூதம் உள்ளளவும்

என்று பாடல் நீள்கிறது.

### "கம்பன் மறந்தானா?"

நீடிய அரக்கர் சேனை நீறு பட்டழிய வாகை சூடினான் ஸ்ரீராமன். முக்கோடி வாழ்நாள், முயன்றுடைய பெருந்தவம், எக்கோடி யாராலும் வெலப்படாய் எனப் பெற்ற வரம், திக்கோடு உலகனைத்தும் செருக்கடந்த புயவலி, வாரணம் பொருத மார்பு, கயிலை வரையினை எடுத்த தோள்கள், தாரணிமவுலி பத்து, சங்கரன் தந்த சந்திரஹாச வாள் இவை போன இடம் எங்கே?

'எனைத்துணையர் ஆயினும் என்னாம் தினைத்துணையும்
தேரான் பிறனில் புகல்?'

வள்ளுவன் ஒரே போடு போட்டு விட்டானே! நீ எத்தனை பெரியவனாயிருந்தால் என்னடா? பிறனில் விழைதல் என்ற ஒரு சிறுமை உன்னைப் படுகுழியில்

தள்ளி விடுமே! அதுதான் இலங்கை வேந்தனை வீழ்த்தியது.

வெற்றி வீரனாகச் சீதையுடன் விமானம் ஏறி வந்த ஸ்ரீராமனும் ஏனையோரும் பரத்துவாச முனிவன் ஆசிரமத்தில் இறங்கிவிட்டனர்.

ஸ்ரீராமன் திடீரெனச் சிந்தித்தார். பரதன் செம்மையின் ஆணி (செம்மைக்கு உரைகல்). குறித்த நாள் எல்லையில் என்னைக் காணாவிடின் எரியில் புகுவான். இத்தனை பேரை நான் காத்தது பெரிதல்ல. பரதன் எனும் நல்லற மூர்த்தியைக் காக்க வேண்டும் என உன்னினார்.

அனுமனை அழைத்துக் கணையாழியைத் தந்து நந்தியம்பதியிடை, 'தள்ளரிய பெருநீதித் தனியாறு புகமண்டும் பள்ளமான' பரதன் கவித்திருப்பான். கணையாழி காட்டி அவன் ஆருயிரைக் காத்துவிடு" என்றான். அனுமனுக்கு என்ன தயக்கமா? உடனே ராமநாமம் சொல்லியவாறு விண்ணில் பாய்ந்தான்.

அங்கே, நந்திக் கிராமத்தில் எரியின் முன் பரதன், அவனருகே சத்துருக்கினன், தாயர், மற்றையோர் நின்றிருந்தனர்.

"சொன்ன நாளில் இராகவன் தோன்றிலன்
மின்னு தீயிடை யான் இனி-வீடுவன்
மன்னன் ஆதி என் சொல்லை மறாது" (10169)

என்று தம்பி சத்துருக்கினனிடம் பரதன் சொன்னான். விம்மி, வெய்துயிர்த்து செவிபொத்தித் துணுக்கம் உற்று, 'உமக்கு நான் என்ன பிழை செய்தேன்?' என்று கோபம் கொழுந்து விட்டெரியக் கேட்டான். தசரதன் பிள்ளைகள் நால்வரில் தாய்–தந்தை சொற்கேட்டு வனம்

சென்றான் ஸ்ரீராமன். அவனைக் காத்து உடன் சென்றான் தாய் சொல் தட்டாத ஒரு இலக்குவன். அவர்கள் வரும் காலம், நாள், கடந்து விட்டதே என்ற துயரத்தில் தீயிடைப் பாய்வான் ஒரு தம்பி. அயலே, நாணமில்லாது அரசை ஏற்க நான் ஒருவனா? ஆஹா! அரசுபதவி மிகவும் இனியதுதான்! பேசாத தம்பி ஒரே பாடலில்தான் பேசுகிறான்! அதற்கு மதிப்பும் அதிகம் தான்! வேறு எங்காவது இந்தக் கடைக்குட்டி, முத்து உருக் கொண்டதுபோல, எத்திருக்கும் கெடச் செய்யும், சத்ருக்கினன் பேசியது உண்டா!

"கானாள நிலமகளைக் கைவிட்டுப்
போனானைக் காத்துப் பின்பு
போனானும் ஒருதம்பி; போனவன்
தான்வரும் அவதி போயிற்று என்னா
ஆனாத உயிர்விட என்று அமைவானும்
ஒருதம்பி; அயலே நாணாது
யானாம் இவ்வர சாள்வேன்? என்னே,
இவ்வரசாட்சி! இனிதே அம்மா!" (10172)

கோசலை விரைந்து வந்து பரதனைத் தடுத்தாள். "எண்ணில் கோடி இராமரும் உன் அருளுக்கு அருகாவரோ? புண்ணியம் அனைய உன்னுயிர் போய் விடின் வானும், மண்ணும், உயிர்களும் வாழுமோ! என் இழைத்தனை மகனே!" என்று கதறினாள்! இப்போது கூடக் கைகேயி வந்து தடுத்தாள் என்று ஏன் கம்பர் அமைக்கவில்லை? கைகேயி வந்தால், பரதன் துடித்து, 'உன்னால்தான் இவ்வளவும்! உன் முகத்தில் விழியேன்' என்று ஒரு கணம் காத்திராமல் நெருப்பில் குதித்து விடக் கூடும். கம்பன் அதனால்தான் திறம் கொள் கோசலைத் தாயை விட்டுத் தடுக்கச் சொன்னான் போலும்!

அனுமன் பாய்ந்து வந்து கையால் எரியைக் கரி ஆக்கினான். கரி – தீயை அணைத்துக் கரி ஆக்கினான். கரி – சாட்சி. அக்னி சாட்சியாக உண்மை சொல் கிறேன். இராமன் வந்துவிட்டான்.

“ஐயன் வந்தனன்; ஆரியன் வந்தனன்” என்று சொல்லிக் குன்று போல் மாருதி நின்றான். கணையாழி காட்டிப் பரதனுக்குத் தான் இராமதூதன் என்று உறுதி செய்தான்.

“அழுகின்ற வாய் எலாம் ஆர்த்து எழுந்தன.
விழுகின்ற கண் எலாம் வெள்ளம் மாறின”
உலகத்து உயிர்களின் காலின் தோன்றலைத்
தொழுது வாழ்த்தின.

அதுசரி; நமக்கு ஒரு ஐயம்! சீதையைக் கண்டு மீண்ட அனுமன் ‘சீதையைக் கண்டேன்’ என்று சொல்லவில்லையே ‘சீதை’ என்று ஆரம்பித்தால் இராமன் மனத்தில் ஆயிரம் கேள்விகள் எழுமே! சீதை இருக்கிறாளோ, இல்லையோ முதல் கவலை. எப்படி இருக்கிறாளோ என அடுத்த கவலை. இப்படி ஏற்படக் கூடாதென்று “கண்டனன்” என்று அழகாக அனுமன் வாய்ச் சொல்லை அமைத்த கம்பருக்கு இங்கு ஏன் மறதி வந்தது?

‘ஐயன் வந்தனன்’ என்று பாடல் அமைந்தது ஏன்? “வந்தனன்” என்று தொடங்கியிருந்தால்தானே சரியாக இருக்கும். இப்படி நமக்கேற்பட்ட ஐயம் மிகச்சிறந்த கவிவாணரான அருணாசலக் கவிராயருக்கும் வந்ததோ?

அழகாகக் கம்பனின் மறதியைச் சரி செய்து விட்டார்! “ஐயன் வந்தனன்; ஆரியன் வந்தனன்” என்பதைச் சற்றே மாற்றி, மத்யமாவதியில்

"வந்தான் வந்தான் பரதா – ரகுராமன்
வந்தான் வந்தான் பரதா –"

என்று பல்லவி அமைத்துப் பாடினார். அனைவரும் மகிழ்ந்தனர் *(நாமும்தாம்!)*

*அனுபல்லவி*

"வந்தான் வந்தான் மோதிரம்
தந்தான் தந்தான் கைமேல்
இந்தா இந்தா தீயினில்
முந்தாதே முந்தாதே"

*சரணம்*

நாயகன் சொல் மறந்தாய் – அண்ணா என்று
பேயனைப் போல் பறந்தாய் –
தாயாரையும் துறந்தாய் – பழிப்போடே
நீ இதற்கோ பிறந்தாய்.
சேயின் முகம் பார்க்கும் தாயின் முகம் போலே
காயும் புழுவுக்குச் சாயும் நிழல் போலே
தீயும் பயிருக்குப் பெய்யும் மழை போலே
மாயன் கஜேந்திரனுக்காய் வந்ததுபோலே
"வந்தான் வந்தான்"

எனப்பாடிய அழகைப் பலமுறை பல மேடைகளில் திருமுருக கிருபானந்த வாரியார் சுவாமி சொல்லி நான் கேட்டுள்ளேன்.

## முடி சூட்டிக்கொண்டான்

"மகுடாபிஷேகம் கொண்டானே" என்ற பாடலில் முடிசூட்டு விழாவின் சீர்த்தியை, நேர்த்தியை விரிவாகச் சந்த நயத்தோடு பாடினார் கவிராயர்.

"அரியணை அனுமன் தாங்க
அங்கதன் உடைவாள் ஏந்த,
பரதன் வெண் குடை கவிக்க,
இருவர்கள் கவரி வீச,

(இருவரும் கவரி பற்ற) என்றும் பாடம் உண்டு

விரை செறி குழலி ஓங்க,
வெண்ணெயூர்ச் சடையன் தங்கள்
மரபுளோர் கொடுக்க வாங்கி,
வசிட்டனே புனைந்தான் மவுலி" (10327)

கோப்புடைய சீரிய சிங்காதனத்து இருந்து ஏழுலகும் தனிக்கோல் செல்ல, உயிர்களை வாழ் வித்தருளிய தருமத்தின் தலைவன் ஸ்ரீராமன்.

"வாழிய சீர் இராமன்!

வாழிய சீதை கோமான்.

வாழிய கோசலை மணிவயிற்றுதித்த வள்ளல்!

வாழிய வாலி மார்பும் மராமரம் ஏழும் சாய

வாழிய கணை ஒன்று ஏவும் தசரதன் மதலைவாழி!

மங்களம்

ஸ்ரீ ராமச்சந்திரனுக்கு ஜய மங்களம்
திவ்ய முகச் சந்திரனுக்கு சுப மங்களம்
மாராபி ராமனுக்கு
மன்னுபரந் தாமனுக்கு
ஈராறு நாமனுக்கு
ரவிகுல சோமனுக்கு – ஜயமங்களம்
கொண்டல் மணி வண்ணனுக்குக்
கண்ணனுக்கு மங்களம்
கோசலை குமாரனுக்கு

வீரனுக்கு மங்களம்
புண்டரீகத் தாளனுக்கு
பூசக்ர வாளனுக்குத்
தண்துளபத் தோளனுக்கு
சானகி மணாளனுக்கு – ஜயமங்களம்

இராம நாடகக் கீர்த்தனை நூலை ஒருமுறை படிக்க எடுத்தால் கீழே வைக்க மனம் வராது. கம்பனின் இராமாவதாரம் முழுமையும் படித்த நிறைவு வரும். பலனும் வரும். இராமன் அருளும் வரும். பாடும் திறனும் வரும்.

கம்பரை எத்தனையோ புலவர்களுடன் ஒப்பிட்டுப் பலரும் பார்த்தனர், இசையறிந்த நான். அருணாசலக் கவிராயரோடு இணைத்துப் பார்த்தேன்.

ஆசை பற்றி அறையலுற்றேன்!

படித்து விட்டுப் பித்து என்பீரோ

பக்தி என்பீரோ?

# 2. புதிய ஆண்மை

## தோற்றுவாய்

உலகப் பொதுமறை நூலாகத் திருக்குறட் பனுவலை அறிஞர்கள் கொண்டாடுவர். "எல்லாப் பொருளும் இதன்பால் உள; இதன்பால் இல்லாதது எப்பொருளும் இல்லையால்" என்று திருவள்ளுவ மாலையில் தமிழ் நாகனார் பாடிய வெண்பா, திருக்குறளைப் பாராட்டும். அதற்கு ஏற்ப, பலவகை அறங்களையும் அடுக்கிய திருக்குறள், பல குறட்பாக்களில் பண்பு நலன்களை வரையறுக்கும் இலக்கணமாகவும் அமைந்தது. அவ்வண்ணம் அமைந்த வரையறைக் குறட்பாக்கள், காப்பிய ஆசிரியர்களின் கைவண்ணத்தால் பெரு விளக்கச் சித்திரங்களாய் மலர்ந்தன. அவ் வகையில், வள்ளுவர், "ஆண்மை" என்ற பண்பைப் பற்பல இடங்களில் வரையறைப் பாக்களாகவும் வடித்தார்; அறம் கொளுத்தும் குறட்பாக்களாகவும் பெய்து அமைத்தார். 'ஆண்மை'யை வள்ளுவத்தின் வழி, சித்திரமாக்கிய கவிச் சக்கரவர்த்தி கம்பனின் நுண்மாண் நுழைபுலத்தை வணங்கிப் பாராட்டும் வகையது இக்கட்டுரை.

## குறள் இலக்கணங்கள்

எண்ணற்ற குறட்பாப் பகுதிகள் பலவகை இலக்கணங்களாக (Definition) அமைவது கண்கூடு,

"அந்தணர் என்போர் அறவோர்" (குறள் 30)

“மனத்துக்கண் மாசிலன் ஆதல் அனைத்து அறன்”
(குறள் 34)

“அழுக்காறு அவாவெகுளி இன்னாச்சொல் நான்கும்
இழுக்கா இயன்றது அறம்” (குறள் 35)

“உடைமையுள் இன்மை விருந்தோம்பல் ஓம்பா
மடமை” (குறள் 89)

“ஒத்தது அறிவான் உயிர் வாழ்வான்” (குறள் 214)

“வறியார்க்கு ஒன்று ஈவதே ஈகை” (குறள் 221)

“உற்றநோய் நோன்றல் உயிர்க்குஉறு கண்செய்யாமை
அற்றே தவத்திற்(கு) உரு.” (குறள் 261)

“வாய்மை எனப்படுவது யாதெனிற் யாதொன்றும்
தீமை இலாத சொலல்” (குறள் 291)

“தூஉய்மை என்பது அவா இன்மை” (குறள் 364)

“செல்வத்துள் செல்வம் செவிச் செல்வம்” (குறள் 411)

“பெருமை பெருமிதம் இன்மை” (குறள் 979)

என்பது போன்ற இலக்கண வரையறை காட்டும் குறட் பகுதிகள் யாவும் சிந்தனைக்கு விருந்தாகும். இந்த நிரலில் மேலே சில எடுத்துக்காட்டுகள் மட்டும் தந்திருக்கிறேன்.

காப்பிய ஆசிரியர் பெரும்பாலும் இந்தக் குறள் இலக்கண வடிவங்களைக் கையாண்டு மகிழ்ந்தனர்; சுவைப்பாரை மகிழ்வித்தனர். அவர்களில் கம்பனும் ஒருவன்; ஒப்பற்றவன் என்னலாம்.

## ஆண்மை:

ஆண்மை என்ற சொல் ஆண்தன்மை என்ற பொருள் தருவது. இது பொதுப்பொருள்.

போற்றத்தக்கதாகிய வீரம், எளிதில் எல்லோராலும் கைக்கொள்ளமுடியாத அரிய செயலாற்றல் என்பன இச் சொல்லுக்குரிய சிறப்புப் பொருட்கள்.

“வினையே ஆடவர்க்கு உயிரே” என்பது தமிழ் இலக்கிய மரபு. ஒரு ஆண்மகன் செயல் ஒன்றும் இன்றி வாளா கிடத்தல் என்பது கூடாது. செயற்பாடுகளும் பெருமைக்குரியனவாக அமைந்தால், அவ் வாடவன் ‘நாயகன்’ ஆகலாம். செருக்கும் பெருமிதமும் கொள்ளற்கு உரிய தகுதி ஆகி, “நடையில் நின்றுயர் நாயகன்” ஆக ஏற்றம் பெறுவான்.

செருக்கும் பெருமிதமும் கொள்வதற்கு ஒரு ஆடவனுக்குக் காரணமாய் அமையக் கூடிய பண்புகள் புகழ், கல்வி, கொடை, வீரம் என்பன. இவற்றுள் வீரப் பண்பே பெருவழக்காய் ஆண்மை என்று வழங்கப் பெறுவதாயிற்று.

## குறள் காட்டும் ஆண்மை

“ஆண்மை” என்ற சொல்லை வள்ளுவர் அதிகாரத் தலைப்பாக இரண்டுமுறை கையாண்டுள்ளார். சான் றாண்மை *(99)*, புல்லறிவாண்மை *(85)* என்பன அவ்விரண்டு அதிகாரங்கள்.

இவை அல்லாமல், வேளாண்மை, தாளாண்மை, காரறிவாண்மை, பேராண்மை, ஊராண்மை, குடி யாண்மை, வாளாண்மை, வினையாண்மை, சான் றாண்மை, இல்லாண்மை என்பனவாக “ஆண்மை”

இடம்பெறும் சொற்களை வள்ளுவர் பல குறட் பாக்களில் கையாள்கின்றார். இவை யாவும் "மை" விகுதி பெற்ற பண்புப் பெயர்கள். இவ்வரிய பண்புகளைக் கூறும் குறள் இலக்கணங்களுக்கு விளக்கச் சித்திரங் களைக் காப்பிய ஆசிரியர்கள் தம் நூல் படைப்புகளில் வடித்துள்ளனர். கம்பநாடன் தானும் அவ்வண்ணம் படைத்து, நம்மைக் களிகொள்ளச் செய்தான்.

## கம்பனும் வள்ளுவரும்

ஆண்மையின் பல்வேறு பகுதிகளை வள்ளுவர் பத்துக்கும் மேற்பட்ட களங்களில் வைத்தார். சுவை அனைத்திற்கும் கம்பன் கைவண்ணத்தால் அற்புத ஓவிய விளக்கங்களை அருளிச் செய்தான். இரண்டு சான்றுகள் மட்டுமே பார்ப்போம்.

### 1. பேராண்மை

பிறன்மனை நோக்காத பெற்றியை வள்ளுவம் பேராண்மை என்று பேசும். இப்பண்புக்குக் காப்பியத் தலைவன் இராமன் சான்றாளன் ஆவான். 'இந்த இப்பிறவிக்கு இருமாதரைச் சிந்தையாலும் தொடாத" சிந்தனை ஆண்மையும் செயலாண்மையும் கூடிப் பேராண்மையாக நின்று, புலன்களின் வெறியாட்டத்தை எளிதில் வென்ற ஆண்மை, இராமன் பால் அமைந்தது என்பதைக் "கம்பனை" உணர்ந்தார் யாவரும் உணர்வர். இன்னும் கொஞ்சம் அதிகநுட்பமாக, பேராண்மைக்கு ஒரு விளக்கம் தருவான் கம்பன். அப்போதுதான், "அவன் யாரினும் யாரினும் மேலவன்" ஆகிய கவிச் சக்கரவர்த்தி ஆகிப் பொலிவான்.

தன்னை அடக்க முடியாமல், மிதிலை நகரில் கன்னிமாடத்திருந்த சீதையை இராமன் நோக்கினான்.

"கண்விழி நுழைந்த கள்வன்" ஆகினான். "அண்ணல் நோக்க, அவளும் நோக்கினாள்". "இருவரும் மாறிப்புக்கு இதயம் எய்தினர்." இரவில் ஓய்வெடுக்கும் இடத்தில் இளவலும் முனிவரும் அருகிருக்க, இராமன் உறக்கம் இன்றித் தவிக்கின்றான். இருட்கனியும் கங்குலும் போன்ற காகுத்தன், "தானும் தனியும் அத் தையலும் ஆயினான்."

தன் நெஞ்சைத் தானே துருவித்துருவிப் பார்க்கின்றான். அறம் திறம்பாத் தயரதன் புதல்வன் ஆனதாலும், அறிவும் தூய்மையும் திரண்டு ஓர் உருக்கொண்ட வசிட்டன் தன்பால் கற்றவன் ஆதலாலும், நடுவு நிலையில் நின்று தன் செய்கையை அலசுகின்றான். "அணங்குகொல் ஆய்மயில் கொல்" என்று தன் பார்வை அக் காரிகையை நோக்கி உற்று நோக்கிற்றே! ஒருக்கால் அவள் இன்னொருவரின் மனைவியாய் இருந்தால் என் பார்வை பழி தரும் பிழையன்றோ? நாணத்திற்குரிய தீச் செயல் ஆகுமோ?" என்று மனம் பதறுகிறான். பின் தேறுகிறான். "குடியாண்மையும் இல்லாண்மையும் நல்லறிவாண்மையும் கொண்ட என் மனம் அவள்பின் சென்றதே என்றால் என் மனம் இயற்கையை மீறாது. அப்பைந்தொடி – பாகு சேர் மொழியினாள் – "கன்னியே ஆகும்" என்று முடிவுக்கு வந்து அமைதி கொள்கிறான். இது பேராண்மை என்ற இலக்கணத்தின் விளக்கச் சித்திரமாகக் கம்பன் வரையும் அற்புத ஓவியம்.

2. "படைச் செருக்கு" என்ற அதிகாரத்தில் வள்ளுவர் நாட்டுவது 'ஊராண்மை' என்ற பண்பு.

> பேராண்மை என்ப தறுகண் ஒன்று உற்றக்கால்
> ஊராண்மை மற்றதன் எஃகு (குறள் 773)

இரக்கம் காட்டாமல் உரம்கொண்டு முனைந்து கடும் போர் செய்யும் ஒரு பெரிய வீரன் அச் செருக் களத்தில் எதிரியாகிய வீரனுக்கு ஒரு துன்பம் நேர்ந்தால் – இழிவுநிலை, இரங்கத்தக்க சூழல் அமைந்தால் – அப்பொழுது, தன் நெஞ்சில் இரக்கமும் பரிவும் சுரந்து நின்று, அப்பகைவனுக்குக் கருணை செய்தல், உதவுதல் ஊராண்மை (உபகாரியாம் தன்மை) என்பதாம். முதல் நாள் போரில் தேரிழந்து, படைக்கலங்கள், கவசம் யாவும் இழந்து இலங்கை வேந்தன் நின்றபோது, “கோசல நாடுடை வள்ளல்” அவன்பால் காட்டிய கருணை “பகைவனுக்கு அருளிய நன்னெஞ்சம்” ஊராண்மைக்கு ஒரு ஒப்பற்ற ஓவிய விளக்கம். “இன்று போய் போர்க்கு நாளைவா என நல்கினன்” என்ற கம்ப சித்திரத்தைப் பரிமேலழகர் எடுத்தாள்வது யாவரும் அறிந்த ஒன்றே.

## புதிய ஆண்மை

இவ்வாறாக, குறள் இலக்கணமாகிய எல்லா “ஆண்மைகட்கும்” விளக்கச் சித்திரங்களைக் கம்பர் தீட்டி வைத்தார் என்பது ஆழ்ந்து கற்றார் கூறும் அனுபவ உண்மை. இன்னும் நுணுகி, ஆய்ந்தால், வள்ளுவப் பட்டியலில் வாராத ஒரு “ஆண்மை”யைக் கம்பன் சொல்லிப் போந்தான் என்பது சுவையான புதுமை ஆகும்.

சுந்தர காண்டத்தில் மேகநாதன் விடுத்த நான்முகன் படையால் (பிரம்மாஸ்திரத்தால்) கட்டுண்ட அநுமன், இராவணனுடைய அவைக்களத்தில் நிற்கின்றான். “யாவன் நீ?” என்று கேட்ட இராவணனுக்கு விடை பகர்ந்த அநுமன் “அல்லியங்கமலமே அனைய செங்கண் ஓர் வில்லிதன் தூதன் யான்” என்று தொடங்கி,

தன்னையும் தன் வணக்கத்துக்குரிய கடவுளாம் இராம பிரானையும் பத்துப் பாடல்களில் அற்புதமாகக் கூறிக் கொள்கிறான். வாலி சேய்விடுத்த தூதன் என்று தெரிந்ததும், இராவணன், "வாலி வலியனா?" என்று கேட்கிறான். "அஞ்சலை அரக்க! வாலி மீளான்! பார்விட்டு அந்தரம் அடைந்தான்! வாலும் போய் விளிந்ததன்றே!" என்று நாயகன் தூதன், "சொல்லின் செல்வன்", "பேரறிஞன்" ஆகிய அனுமன் சிரிப்புக்கு இடையே, பதில் சொன்னான், "தூது வந்த நீ, இகல்புரி தன்மை என்னை? நும்மினைக் கொல்லாம் அஞ்சலை" என்றான் இராவணன். இந்த இடத்தில், "உன்னரும் குணத்தினான்" ஆகிய அனுமன், பற்பல நீதிகளை, செல்வம், யாக்கை, இளமை இவை நிலையாமையை எல்லாம் இராவணனுக்கு எடுத்துரைத்தான். "கோதிறந்த" நீதிகளை அனுமன் பேசியதாகக் கம்பன் பத்தொன்பது பாடல்கள் வடிக்கின்றான். அவற்றில் ஒன்றில்,

"இச்சைத் தன்மையினில் பிறர் இல்லினை
நச்சி நாளும் நகையுற நாணிலன்
பச்சை மேனி புலர்ந்து பழிபடூஉம்
கொச்சை ஆண்மையும் சீர்மையில் கூடுமோ?"

என்பான் அனுமன். இராவணன் மிகப்பெரிய வீரன், கல்வியாளன், அஞ்சா நெஞ்சன், "ஆண்மையாளன்." ஆனால், உலகம் நகை செய்ய, அது கண்டு நாணாதவன் ஆகி, பிறர்மனை நச்சியவன். அதனால் அவன் கொண்ட ஆண்மை, மிகத் தூய பேராண்மை அன்று (absolute majesty அல்ல). அதற்கு நேர்மாறாக, இழுக்குற்ற ஆண்மை, கொச்சை ஆண்மை (polluted majesty) என்றான் அனுமன்.

"இவன் கல்லாத கலைகள் இல்லை" என்று பாராட்டப் பெற்ற அனுமன், இரா்வணன் கொண்ட

ஆண்மையைச் சீர்தூக்கி அலசி, அதற்குச் சூட்டிய பெயர் "கொச்சை ஆண்மை." இது, கம்பன் தீட்டிய புதுமை வண்ணம்.

## புதுமையின் இயைபு:

வள்ளுவத்தில் இல்லாத ஒரு புதுமையைக் கம்பன் படைத்தருளினான் என்பது உண்மைதான். ஆயினும் திருவள்ளுவமாலையில் பாடிய புலவர் கூற்று, பொய் ஆகிவிடுமே என்று ஆய்வு நெஞ்சம் அலமரல் உற்றது. "எல்லாப் பொருளும் இதன்பால் உள" என்று பாடி அமையாமல், "இதன்பால் இல்லாத எப்பொருளும் இல்லையால்" என்றல்லவா மதுரைத் தமிழ்நாகனார் அறைகூவல் விடுக்கிறார். அதை இதுவரை யாரும் மறுத்து அமையவில்லையே? சிந்தனைக்கு வித்திட்டேன்.

"அறத்திற்கே அன்பு சார்பு என்ப அறியார்;
மறத்திற்கும் அஃதே துணை" (குறள் 76)

என்பது வள்ளுவம். அறிவியல் கோட்பாடுகளில்கூட இந் நிலையைப் பின்பற்றும் மரபு உண்டு. அன்பைச் சார்வது அறம் மட்டும் என்பது உலக வழக்கில் பெரு வழக்கு. ஆனால், அறத்தின் நேர் எதிர்நிலையாகிய (Diametricaly oppასite) மறத்திற்கும் அன்பே சார்பொருள் என்பது சிலருக்கே தெரியும். எனினும் அது உண்மை. எனவே, அறம் போற்றப்படும் களங்களில் மறம், "மறை"யாக (Invisible) ஆங்கே பின்புலத்தில் நிற்கின்றது. அறிவியலில், "கண்ணாடிப் பிம்பம் போல்" என்றும், "உச்சிப் பள்ளத் தொடர்பு" என்றும் கூறல் உண்டு. உண்மை மனிதனின் வலக்கை, கண்ணாடி மனிதனுக்கு இடக்கை ஆகும். வான முகட்டின் உச்சிப்புள்ளி (Zenith) பற்றிய செய்திகள் தொகுத்து வழங்கப்படும் போது, அதற்கு நேர்மாறான (direct opposite) கீழ்ப்புள்ளி (Nadir) என்ற

இடம் உய்த்துணரப்படும். இதே மரபில், "பேராண்மை" என்ற உச்சிப்பண்பின் நேர் எதிர்ப் பண்பு "கொச்சை ஆண்மை." பேராண்மைக்கு இலக்கியம் இராமன்; கொச்சை ஆண்மைக்கு இலக்கியம் இராவணன். "பேராண்மை" என்ற அறப்பகுதி பேசிய களத்தில், அதன் நேர் எதிர்மாறான மறப்பகுதியைச் சொல்லாமல் விட்டாலும், அதை உய்த்து உணர்தல் வேண்டும் என்பது கருதி வள்ளுவர் "கொச்சை ஆண்மை"யைக் கூறாமல் விட்டிருத்தல் வேண்டும். கவிச்சக்கரவர்த்தி கல்வியிற் பெரியவன் ஆகையால், அதையும் விட்டான் இல்லை.

**நிறைவுரை:**

கம்பனும் வள்ளுவரும் வழங்கியவை அமுதக் கடல்களில் இரண்டு. தமிழைச் செம்மொழித் தகுதி ஆக்கக் காரணம் ஆகிய பல செல்வங்களில் தலையாய இரண்டு. அவற்றை ஒப்புநோக்கி, தோண்டச் சுரக்கும் இன்பம் மாபெரிது. அவ்வின்பத்தில், "ஆண்மை" பற்றிய என் சிந்தனையைச் சுவைஞர்களுக்குப் பணிவுடன் இவ் ஆய்வுக் கட்டுரையில் படைத்திருக்கின்றேன். யாமறிந்த புலவரிலே வள்ளுவர், கம்பர் இருவர்க்கும் இணை யாரும் இல்லை!

# 3. மேதாவிகட்கெல்லாம் மேலான மேன்மையான – வீடணன்

வீடணன்! அன்று முதல் இன்றுவரை மிகக் கடுமையான விமர்சனங்களுக்கு ஆளாகி வரும் கதாபாத்திரம்.

வீடணன் செயல்கள் சரியா? தவறா? அறத்தின் பாற்பட்டதா? நம்பிக்கைத் துரோகமா? தக்க சமயத்தில் தருமத்திற்குத் துணைபோனவனா? தேவையான நேரத்தில் அண்ணன் பக்கம் நில்லாமல் அவன் கழுத்தறுத்தவனா?

இன்றுவரை பட்டிமன்றப் பேச்சாளர்களின் வாய் களுக்கு அவலாக இருப்பவன் வீடணன்.

ஆனால், கவிச்சக்கரவர்த்தி கம்பரின் காவியம் முழுவதையும் படித்துப் பார்க்கையில், தொடக்கம் முதல் இறுதிவரை, அறம் காக்கும் திருக்குமரனாய் அவதரித்து, அறத்தின் வழியே வாழ்க்கை நடத்தி, அண்ணனுக்கும் தக்க நேரங்களில் அறத்தின் கூறுபாடுகளை விளக்கி நல்லறம் உரைத்து, இடித்துரைத்து, அறமூர்த்தியாகத் திகழும் இராமபிரானின் அருந்துணையாகி, அறம் வெல்லப் பாவம் தோற்கத் தன் வாழ்நாளை அர்ப்பணித்த மாபெரும் தர்ம மூர்த்தியாகத் திகழ்பவன் வீடணன் என அறியலாம்.

வீடணனை அறிமுகப்படுத்தும்போதே கவிச் சக்கரவர்த்தி கம்பர்,

"வேந்தர் வேதியர் மேல்உளோர் கீழ்உளோர்
விரும்பப் போந்த புண்ணியன்"

என்று பாராட்டுகின்றார்.

"வெண்ணிறம் உடைய தருமம், கருநிறத்து அரக்கர்கள் வாழும் இலங்கையில் வெளிப்படையாக வாழ இயலாது என்று கருதிக் கரிய நிறம் பெற்று வீடணனாக வாழ்ந்தது" என்று பேசும் கம்பர்.

"பளிக்கு வேதிகைப் பவளத்தின் கூட்டத்துப் பசுந்தேன்
துளிக்கும் கற்பகப் பந்தரில் கருநிறத்தோர் பால்
வெளித்து வைகுதல் அரிது என அவர் உரு மேவி
ஒளித்து வாழ்கின்ற தருமம் அன்னான்"

என்று விளக்கமாகக் கூறுகிறார்.

வீடணனை முதன்முறையாக நேரில் காணும் அனுமன்,

"உற்றுநின்று அவன் உணர்வைத் தன்உணர்வினால் உணர்ந்தான்
குற்றம் இல்லாதோர் குணத்தினன் இவன் எனக் கொண்டான்"

என்று கம்பர் கூறுகிறார்.

அனுமனைக் கொலை செய்ய ஆணையிடும் அண்ணன் இராவணனை மறுத்து,

"மாதரைக் கொலை செய்தார்கள் உளர் என வரினும் வந்த
தூதரைக் கொன்றுளார்கள் யாவரே தொல்லை நல்லோர்"

என்று பேசும் வீடணனிடம் நியாய உணர்வை, அறம் அறிந்த பாங்கை, அறத்தை வலியுறுத்திப் பேசும் துணிவை நாம் காண்கின்றோம்.

"எந்தை நீ, யாயும் நீ, எம்முன் நீ, தவ
வந்தனைத் தெய்வம் நீ, மற்றும் முற்றும் நீ"

என்று இராவணனிடம் வீடணன் பேசும்போது, இலக்குவனும் பரதனும் இராமபிரானை எப்படிக் கருதினரோ, எப்படிப் போற்றினரோ அதற்கு ஒரு சிறிதும் குறையாமல், தன் அண்ணனைத் தெய்வமாகப் போற்றும் அருமைத் தம்பியாக நாம் வீடணனைப் பார்க்கின்றோம்.

மந்திராலோசனை மண்டபத்தில், நேருக்கு நேர் நின்று, அன்புடனும் பணிவுடனும் அதே நேரம் மிக உறுதியுடனும் அண்ணனிடம் அவன் பேசும் சொற்களில் வீடணனது அற உணர்வு மிகச் சிறப்பாகப் புலப்படுகிறது.

இரண்யனின் வரலாற்றை அவன் எடுத்து விளக்கும் போது, பரம பாகவதனாக, மிகச் சிறந்த பக்தனாகக் காட்சியளிக்கின்றான்.

"விழி எதிர் நிற்றியேல் விளிதி"

என்று இராவணன் சீறியபின், வேறு வழி இல்லாத நிலையில், இலங்கையில் இருக்க முடியாத சூழ்நிலையில், தன் எதிர்காலப் பணி என்ன என்பதைத் தன் சக நண்பர்களிடம் ஆலோசனை கலந்து, அவர்கள் உரைத்த வழியே,

"மாட்சியின் அமைந்தது வேறுமற்று இலை
தாட்சியில் பொருள்தரும் தரும மூர்த்தியைக்
காட்சியே இனிக்கடன் என்று கல்விசால்
சூட்சியின் கிழவரும் துணிந்து"

சொல்லி வழியில்,

"நல்லது சொல்லினீர் நாமும் வேறினி
அல்லது செய்துமேல் அரக்கர் ஆதுமால்

எல்லைஇல் பெருங்குணத்து இராமன் தாள்இணை
புல்லுதும், புல்லி இப்பிறவி போக்குதும்"

"முன்புறக் கண்டிலென், கேள்வி முன்பிலேன்
அன்புறக் காரணம் அறியகிற்றிலேன்
என்புறக் குளிரும் நெஞ்சு உருகுமேல், அவன்
புன்புறப் பிறவியின் பகைஞன் போலுமால்"

என்று இராமபிரானிடம் சரணாகதி அடையத் தீர்மானிக்கிறான் வீடணன். தனது குண இயல்பும், மன இயல்பும் இறை வழியில் மட்டுமே செல்லும் என்பதையும்,

"ஆதிஅம் பரமனுக்கு அன்பும், நல்லறம்
நீதியின் வழாமையும், உயிர்க்கு நேயமும்
வேதியர் அருளும் நான் விரும்பிப் பெற்றெனென்
போதுஉறு கிழவனைத் தவம்முன் பூண்ட நாள்"

என்று, முன்னொரு நாள் தவம் புரிந்து, பிரம்மனை நேரில் தரிசித்து வரம் பெற்ற நாளில், இறை அன்பு, நல்லறவுணர்வு, நீதி வழாமை, உயிர்நேயம், வேதியர் அருள் ஆகியனவே நான் வேண்டிப் பெற்ற வரம் என்று வீடணன் கூறும் சொற்களில் அவனது மன இயல்பை நாம் தெளிவாக அறிய முடிகின்றது.

அதனால்தான், வீடணனைப் பற்றி இராமனிடம் புகழ்ந்து பேசும் அனுமன், வீடணன் அரண்மனை

"நிந்தனை நறவமும் நெறியில் ஊன்களும்
தந்தன கண்டிலென், தரும தானமும்
வந்தனை நீதியும் பிறவும் மாண்புஅமைந்து
அந்தணர் இல் எனப் பொலிந்தது"

எனப் பாராட்டிப் பேசுகின்றான்.

அடைக்கலம் புகவந்த தன்னை, அழைத்துவருமாறு இராமன் கூறியதாகக் கேட்டவுடன் வீடணன்.

"தாழ்சடைக் கடவுள் உண்ட

நஞ்செனச் சிறந்தேன் அன்றோ,
நாயகன் அருளின், நாயேன்"

என்று மகிழ்கின்றான்.

வீடணனை வரவேற்று, அருகழைத்து, அரவணைத்து மகிழும் இராமன்,

"குகனொடும் ஐவர் ஆனேம் முன்பு; குன்று சூழ்வான்
மகனொடும் அறுவர் ஆனேம்; எம்முழை அன்பின் வந்த
அகன்அமர் காதல் ஐய! நின்னொடும் எழுவர் ஆனேம்
புகல்அரும் கானம் தந்து, புதல்வரால் பொலிந்தான் நுந்தை"

என்று வீடணனைத் தன் சகோதரனாக ஏற்றுக் கொள்கின்றான். அதுமட்டுமன்று,

"தாழ் கடல் இலங்கைச் செல்வம் நின்னதே தந்தேன்"

என்று கூறி வீடணனுக்கு இலங்கை அரசை வழங்குகின்றான் இராமபிரான்.

ஆனால், அருட்செல்வம் வேண்டி வந்த அறச் செல்வனாகிய வீடணன், வெறும் அரசுச்செல்வம் விரும்பாதவனாய், "பரதனுக்கு நீ அளித்த திருவடியை எனக்கு மணிமுடியாகச் சூட்டவேண்டும்" என்று வேண்டுகின்றான்.

"விளைவினை அறியும் மேன்மை வீடணன் என்று வீயா
அளவுஅறு பெருமைச் செல்வம் அளித்தனை ஆயின், ஐய
களவுஇயல் அரக்கன் பின்னே தோன்றிய கயமைதீர
இளையவற் கவித்த மோலி என்னையும் கவித்தி"

என்றான்.

வீடணன் வேண்டுகோளை ஏற்ற இராமன் மனம் மிக மகிழ்ந்து, வீடணனது திருமுடிமேல் திருவடிகளைச் சூட்டி வாழ்த்துகின்றான்.

இந்நிகழ்ச்சியை வருணிக்க முற்பட்ட கம்பர், "திருமாலின் திருவடிகளில் பிரம்மன் தெளித்த நீர், கங்கையாகப் பெருகிப் பாய்ந்தது. அந்தப் புண்ணிய நதியில் நீராடுபவர்களின் ஐம்புலப் பாவங்களும் உடனடியாக நீங்கி மறையும் என்றால், அந்தத் திருவடிகளையே தனது தலையில் சூடிக்கொண்ட வீடணன் பெருமை எத்துணைச் சிறப்புடையது! உலகில் இன்றுவரை பிறந்து வாழ்ந்த முனிவர்கள், தேவர்கள், வேள்விகள் செய்தோர், மாதவம் புரிந்தோர் யாவரே யாயினும் வீடணன் பெற்ற பெருமையும் சிறப்பும் பாக்கியமும் பெற்றவர் யார்? யாரும் இல்லை" என்று பாராட்டுகின்றார்.

"தேடுவார் தேடநின்ற சேவடி தானும் தேடி
நாடுவான் அன்று கண்ட நான்முகன் கழீஇய நல்நீர்
ஆடுவார் பாவம் ஐந்தும் நீங்கி, மேல் அமரர் ஆவார்
சூடுவார் எய்தும் தன்மை சொல்லுவார் யாவர் சொல்லீர்"

"இற்றைநாள் அளவும் யாரும் இருடிகள், இமையோர், ஞானம்
முற்றினர், அன்பு பூண்டார், வேள்விகள் முடித்து நின்றார்
மற்றுமாதவரும், எல்லாம், வாள்எயிற்று இலங்கை வேந்தன்
பெற்றது ஆர்பெற்றார்! என்று வியந்தனர் பெரியோர் எல்லாம்"

எனவே, நன்மை நன்மையோடு சேர்ந்தது, அறம் அறத்தோடு இணைந்தது, தருமமும் தருமமும் கைகோர்த்துக் கொண்டன என்பதனை உணர்ந்தால், அதுவே உலக இயல்பு. அதுவே அற இயல்பு, அதுவே நியாயம், அதுவே நீதிமுறை என்பதை நாம் உணர்ந்தால்,

இராமபிரானிடம் வீடணன் சரண் அடைந்ததும், ஸ்ரீராம ஜெயத்துக்காக, தருமத்தின் வெற்றிக்காக, அவன் தன்னால் இயன்ற உதவிகளைச் செய்ததும் அறமே என்பதை உணரலாம்.

எனவேதான், கவிச்சக்கரவர்த்தி கம்பர், வீடணனை, "அறிஞரின் மிக்கான்" என்றும் "ஞானத் தம்பி" என்றும், "மேதாவிகட்கெல்லாம் மேலான மேன்மையான்" என்றும் போற்றிப் பாராட்டுகின்றார்.

# 4. வஞ்சக மகள்

இராமகாதையின் முதல் திருப்புமுனை மந்தரை, கைகேயி இருவரும் ஆற்றிய சூழ்ச்சியும் கேட்ட வரங்களுமென்றால், அடுத்த திருப்புமுனை, மிக முக்கியமான திருப்புமுனை, சூர்ப்பணகையின் வருகை யும் செயல்களும் ஆகும்.

ஆரண்யத்தில் சூர்ப்பணகை இராமனைக் கண்டு, காமம் கொண்டு, சீதையைத் தூக்க முற்பட்டு, இலக்குவனால் பங்கப்படுத்தப்படவில்லை யெனின், இராவணன் மனத்தில் சீதையைப் பற்றிய காமத்தைக் கொழுந்துவிட்டு எரியச் செய்யவில்லையெனின், இராவணன் அரக்கர் குலத்தோடு மடிய நேரிட்டிராது. இராமாவதார நோக்கமும் நிறைவேறியிராது.

அழகே உருவான சீதாதேவி அருகில் இருக்கும் வரை, இராமன் தன்னை ஏற்கமாட்டான். அவளை அப்புறப்படுத்துவதே சாலச் சிறந்தது என்று கருதிச் சீதையைத் தூக்க முற்படும் சூப்பணகை பின்னால் இராவணனிடம் பேசுகையில் அவனுக்காகவே சீதையைக் கவரமுற்பட்டதாக மாற்றிக் கூறுகிறாள். சீதாதேவியின் அழகைப் பலபடப் புகழ்ந்து, இராவணன் மனத்தில் அளவிடமுடியாத காமத்தை உண்டாக்கி, மயிலுடைச் சாயலாளை வஞ்சியா முன்னம் இலங்கை நாதன் இதயமாம் சிறையில் வைத்திடக் காரணமாகிறாள். அதனால், சிவன் இருந்த நெஞ்சத்தில் சீதையை

வைத்ததால், கடவுள் இருந்த நெஞ்சில் காமம் நுழைந்ததால், அக்காமம் உள்ளிருக்கும் எனக்கருதி உடல் புகுந்து இராமன் வாளி தடவும் நிலை ஏற்படுகிறது.

ஒரு குற்றத்தைச் செய்பவருக்கு வழங்கப்படும் தண்டனையைவிட, அக்குற்றம் புரியத் தூண்டியவருக்கே கூடுதலாகத் தண்டனை தர வேண்டுமென்பர். சீதாதேவியை அபகரித்ததால் இராவணன் மரண தண்டனை பெற்றானென்றால், அக்குற்றத்தை அவன் புரிய முழுமுதற் காரணமாக இருந்த சூர்ப்பணகைக்கு உரிய தண்டனை கிடைக்கவில்லையே ஏன்?

மூக்கும் செவியும் அறுபட்டு மானபங்கப்படுத்தப் பட்ட தண்டனை, சீதையைக் கவர முற்பட்டமைக்கே தவிர, இராவணனின் காமத்தைத் தூண்டியதற்காக அன்று. இராவணன் வதத்தோடு சூர்ப்பணகை வதம் நடைபெற்றதாக இலக்கியத்தில் பேசப்படவில்லை. எனின், சூர்ப்பணகைக்கு இராவணன் முன்னரே இழைத்த ஒரு கொடும் குற்றத்திற்காகவே அவள்மூலம் இராவணன் பழிவாங்கப்பட்டான் எனக்கொள்ள இயன்றால், குற்றம் புரியத் தூண்டியவருக்கு உரிய தண்டனை கிடைக்கவில்லையே என்ற கேள்வி எழ வாய்ப்பில்லாமற் போகும். அது அப்படித்தானா? சிறிது சிந்தித்துப் பார்க்க வேண்டும்.

சூர்ப்பணகைப் படலத்தில் அவளை அறிமுகப் படுத்தும் கவிச்சக்கரவர்த்தி கம்பர்,

"நீல மாமணி நிற நிருதர் வேந்தனை
மூல நாசம்பெற முடிக்கும் மொய்ம்பினாள்
மேலைநாள் உயிரொடும் பிறந்து தான் விளை
காலம் ஓர்ந்து உடன் உறை கடிய நோய் அனாள்"

என்று கூறுவதை எண்ணிப் பார்க்கின்றோம். இராவணனை வேரோடு அழியும்படி, ஒழிக்கக்கூடிய வல்லமை உடையவள் என்று பேசும்போது மொய்ம்பு என்ற சொல்லின் ஆழத்தை எண்ணிப் பார்க்க வேண்டும். உயிர்தோன்றிய முற்காலத்தில், அந்த உடலோடு கூடவே தோன்றி, தான் வெளிப்படுவதற்கு உரிய காலத்தை எதிர்பார்த்துக்கொண்டு அவ்வுயிரோடு கூடவே தங்குகின்ற கொடிய நோயை ஒத்தவள் என்று கூறும்போது தான் விளை காலம் ஓர்ந்து என்று கூறுவது, இராவணன் அழிவை மிகவும் ஆவலோடு எதிர் பார்த்துக்கொண்டு, அவ்வாய்ப்பு வரும்வரை கூடவே தங்கியிருந்தாள் என்ற கருத்தைப் புலப்படுத்துவதைச் சிந்தித்துப் பார்க்க வேண்டும்.

இராமன் தங்கி இருந்த சோலைக்குச் சூர்ப்பணகை வரும் காட்சியைக் கூற வந்த கம்பர்,

"வெய்யது ஓர் காரணம் உண்மை மேயினாள்"

என்கிறார். மிகக் கொடியதான ஒரு காரணம் இருப்பதால் இராமன் தங்கியிருந்த சோலைக்கு வந்து சேர்ந்தாள் என்று கூறும் கம்பர், கொடியதாகிய அந்தக் காரணம் என்ன என்பதை வெளிப்படையாகக் கூறாமல் விட்டுவிடுகிறார். அது ஏன்? அந்தக் காரணம் என்ன?

அடுத்த பாடலில், "அண்டசத்து அருந்துயில் துறந்த ஐயனைக் கண்டனள் தன் கிளைக்கு இறுதிகாட்டுவாள்" என்பர் கம்பர். அவளது குணாதிசயத்தைக் கூறுவதற் காக அவ்வாறு கூறினார் என்றாலும், மிக அழுத்தமாக, "தன் கிளைக்கு இறுதி காட்டுவாள்" என்று வலியுறுத்திச் சொல்லும்பாங்கு எண்ணற்பாலது.

அவளது அழகுத் தோற்றத்தை வருணிக்க வந்த கம்பர்,

"வஞ்சி என நஞ்சம் என வஞ்சமகள் வந்தாள்" என்று கூறுகிறார். அரக்கி என்ற முறையில் பொதுவாக வஞ்சமகள் என்று கூறினாரென்றாலும், இராமன் மீது அடங்காத காமத்தோடு, நெஞ்சில் எதிர்பார்ப்போடு வரும் சூர்ப்பணகைக்கு, இராமன்மீது அந்த நேரத்தில் எந்தவிதமான வஞ்சமும் சூழ்ச்சியும், இருப்பதற்கு உறுதி யாக வாய்ப்பில்லை. எனவே, வஞ்சனை நிரம்பியவள், வஞ்சக உள்ளம் கொண்டவள் என்றால், அந்த வஞ்சகம் யார் மீது? என்று கேள்வி நம்முள் எழுகின்றதன்றோ?

இராமனோடு உரையாடும்போது "முன்னம் தேவர்ப் பராவினென் நீங்கினேன் அப்பழிபடு பிறவி" என்கிறாள் சூர்ப்பணகை. அரக்கர் குலத்தைப் 'பழிபடு பிறவி' என்பதும், நான் அக்குலத்தை விட்டு விட்டேன் என்று கூறுவதும் நோக்கற்பாலது.

மூக்கு அறுபட்ட நிலையிலும், இராமன் மீது கொண்ட தனது காதலை வெளிப்படுத்த முற்படும் சூர்ப்பணகை, "என்னை நீ ஏற்றுக் கொண்டால், இராவணனையும் மற்ற அரக்கர்களையும் மிக எளிதாகக்

"கொல்லலாம் மாயங்கள் குறித்தனவே
கொள்ளலாம் கொற்றம் முற்ற
வெல்லலாம் அவர் இயற்றும் வினை எல்லாம் கடக்கலாம்."

என்றும்,

"தாம் பொறியின் பல மாயம் தரும் பொறிகள்
அறிந்து அவற்றைத் தடுப்பென் அன்றே
பாம்பறியும் பாம்பின்கால் என மொழியும்
பழமொழியும் பார்க்கிலிரோ"

என்றும் பேசும்போது, அரக்கர்கள் மற்றும் இராவணன் அழிவில் அவளுக்கு மறுப்பு ஏதும் இல்லை என்பது புலனாகிறது. எல்லாவிதமான உதவிகளும் செய்துதர

அவள் தயாராக இருப்பதும் புலனாகிறது. மேலும், "நீ, நான், இலக்குவன் மூன்று பேரும் ஒன்று சேர்ந்தால் அரக்கர்களை மிக எளிதில் வெல்லலாம். போர்க் களத்தைக் குருதிக் குளமாக்கி வெற்றி கொள்வோம். கொடிய வலிமை கொண்ட அரக்க வீரரைக் கொன்ற பிறகு சூரியன் – சந்திரன் என்னும் இரண்டு கோள்களை யும் சிறைவைத்த இராவணனுக்கு இளையவளாகிய நான், அவனுக்குப் போரில் இளைக்க மாட்டேன் என்னும் உண்மையை உணர்ந்து, உன் தம்பியோடு அவன் மனைவியாக என்னை இருக்கச் செய்" என்று கூறுகின்றாள்.

"நிருதரோடும்
களம்கோடற்கு உரிய செருக் கண்ணியக்கால்
ஒரு மூவேம் கலந்த காலை
குளம்கோடும் அன்றே அக்கொடிய திறல்
வீரர்தமைக் கொன்ற பின்னர்
இளங்கோவோடு எனை இருத்தி இருகோளும்
சிறை வைத்தார்க்கு இளையாள் என்றே"

இப்பாடலில், இராமன் இலக்குவனோடு தான் கூட்டணி அமைத்து, அரக்கர்களை அழிக்க அவள் காட்டும் வேகம் புலப்படுகிறது.

சீதாதேவியின் பேரழகை இராவணனிடம் சூர்ப்ப ணகை எடுத்துச் சொல்லுமிடத்தில், கம்பன் கவிதை களில் வெளிப்படைப் பொருள் ஒன்றும், ஊடகமாக வேறொரு பொருளும் இருப்பதுபோல் அமைந்துள்ள கம்பசித்திரத்தைக் காண்கின்றோம்.

"இந்திரன் சசியைப் பெற்றான். சிவனோ உமையைப் பெற்றான். திருமாலோ திருமகளைப் பெற்றான். சீதையைப் பெற்றாய் நீயும், அவர்களைவிட நீயே நன்மை பெற்றாய்" என்று சூர்ப்பணகை கூறும் –

அந்தரம் பார்க்கின் நன்மை
அவர்க்கு இலை உனக்கே ஐயா"

என்னும் இவ்வரிகளில், இராவணனைப் பாராட்டுவது போல நேர் பொருள் இருந்தாலும், "அந்தரம் பார்க்கின் நன்மை அவர்க்கு இல்லை உனக்கு" என்று கூறலாம் பாங்கும் இருப்பதை எண்ணிப் பார்க்கின்றோம்.

"பாகத்தில் ஒருவன் வைத்தான் பங்கயத்து இருந்த பொன்னை
ஆகத்தில் ஒருவன் வைத்தான், அந்தணன் நாவில் வைத்தான்
மேகத்தில் பிறந்த மின்னை வென்றநுண் இடையினாளை
மாகத்தோள் வீர பெற்றால் எங்ஙனம் வைத்து வாழ்தி"

எனும் பாடலில், "சீதையை நீ அடைந்தால் அவளை எந்த இடத்தில் வைத்துக்கொண்டு வாழ்வாய்" எனும் நேர்பொருளும், "சீதை கிடைத்தால் அவளை வைத்து நீ எங்கே வாழப் போகிறாய்" என்ற மறைபொருளும் கண்டு வியக்கின்றோம்.

"பிள்ளைபோல் பேச்சினாளைப் பெற்றபின் பிழைக்கலாற்றாய்
கொள்ளைபோகின்ற செல்வம் அவளுக்கே கொடுத்தி ஐய
வள்ளலே உனக்கு நல்லேன் மற்றுநின் மனையில் வாழும்
கிள்ளைபோல் மொழியார்க் கெல்லாம் கேடு
சூழ்கின்றேன் அன்றே"

எனும் பாடலில் "பிழைக்க மாட்டாய்," "கொள்ளை போகும் செல்வம்," "உன் மனைவியர்க்கு நான் கேடு செய்கின்றேன்" என்பன போன்ற மறை பொருள்கள் தொனிப்பொருளாக உள்ள கம்ப சித்திரத்தைக் காண்கின்றோம்.

அந்த உட்பொருள்கள் கவிநயமா? அல்லது உண்மையிலேயே சூர்ப்பணகையின் உட்கருத்தா? எண்ணிப் பார்க்கின்றோம்.

இராவண வதம் முடிந்துவிட்டது. மும்மடங்கு பொலிந்த முகத்தினனாய்த் தரைமீது கிடக்கும் தமையன் உடல் கண்டு வீடணன் புலம்புகின்றான்:

"கொல்லாத மைத்துனனைக் கொன்றாய் என்று
அதுகுறித்துக் கொடுமை சூழ்ந்து
பல்லாலே இதழ்அதுக்கும் கொடும்பாவி
நெடும்பாரப் பழி தீர்ந்தாளோ"

"கொல்லத் தகாத மைத்துனனைக் கொன்றாய் என்பதற்கு ஈடாகக் கொடுமை செய்யச் சூழ்ச்சி செய்து பல்லாலே உதட்டைக் கடிக்கும் கொடும்பாவியான சூர்ப்பணகை தனது நெடுநாட் பகைக்குப் பழி தீர்த்துக் கொண்டாளோ" என்ற வீடணனது ஐயம் நமக்கும் ஏற்படுகின்றது.

சூர்ப்பணகையின் கணவனை இராவணன் கொன்ற வரலாறு கம்பன் கதையில் விரிவாக இடம் பெற வில்லை. ஆனால் ஒட்டக்கூத்தர் இயற்றிய உத்தர காண்டத்தில் அந்த வரலாறு விரிவாகக் காணப் படுவதுடன் சூர்ப்பணகையின் கோபமும், ஆவேசமும், அவள் அண்ணன் மீது கொள்ளும் வஞ்சமும் தெளிவாகக் கூறப்பட்டுள்ளன.

இராவணன் தன் தங்கை சூர்ப்பணகை மீது காதல் கொண்ட வித்துருசிங்கன் எனும் காலகேய வம்ச வீரனுக்கு மணம்முடித்து வைக்கின்றான்.

சூர்ப்பணகை நலத்தைக் கண்டு,

"விடல் ஒல்லேன் என விரும்பும் வித்துருசிங்
கேசனுக்கு விதியின் ஈந்தான்" (ஒட். உத்தர 239)

காதல் திருமணம் புரிந்த சூர்ப்பணகையும் வித்துரு சிங்கனும் மனம் ஒத்து, ஈருடல் ஒருயிராய் உவப்புடன் வாழ்கின்றனர்.

திக்குவிசயம் செய்யும் இராவணன் மணிமதி என்னும் நகரைக் கடந்து, வருணனின் கல்நகர் எனும் நகரை நெருங்கி, காலகேயர்களை எல்லாம் கண நேரத்தில், கொன்று குவித்தான். அப்போரில் கால கேயரில் ஒருவனாகிய வித்துருசிங்கனும் இராவணனால் கொல்லப்படுகின்றான்.

"அந்நகரி விட்டு அரக்கன் அடல் வருணன்
தனைவெல்வான் அவன்தன் மேவும்
கன்னகரி தனைமுட்டிக் காலகேயரை
யெல்லாம் கணத்திற் கொன்று
தன்னுடைய தங்கையாம் சலமிகுந்த
சூர்ப்பணகை தன்னைக் கொண்ட
மின்னனைய சுடர் இலைவேல்
வித்துருசிங்கன்தனை வெங்களத்து வீழ்த்தான்"

(ஒட். உத்தர 411)

காதல் கணவன் இறந்த செய்தி அறிந்த சூர்ப் பணகை அழுது புலம்பும் காட்சியைப் பல பாடல்களில் ஒட்டக்கூத்தர் விரிவாகக் கூறுகிறார்.

"முன்னரே என்னை உனக்கு முறைப்படி, தானே திருமணம் செய்துகொடுத்துவிட்டுப் பின்னர் நான் மங்கலநாண் இழக்குமாறு உன்னைக் கொன்ற என் அண்ணன் மூவுலக நாயகனாக ஆள, நான் அதனைப் பார்த்து உடல் சுமந்து, உயிர்சுமந்து வாழ்வேனோ?" என்று புலம்புகிறாள் சூர்ப்பணகை.

"முன்னமே தானென்னை முறைமையாலே கொடுத்துப்
பின் எனைநூல் இழப்பித்த இராவணனாம் என்தமையன்
தன்னை மூவுலகான யான்கண்டு தார் அவுணர்
மன்னனே உடல் சுமந்து வாழ்வேனோ வாழ்வேனோ"

(ஒட் உத்தர 428)

"கரிய மையைக் காட்டிலும், கரிய மனத்தைக் கொண்ட இராவணனின் உடலை முறிக்க முடிய வில்லையே எனக் கருதித் தரையில் கிடைக்கின் றனையோ"

"மைம்முறித்த கருமனத்து வாளரக்கர்கோமானை
மெய்ம்முறிக்கப் பெற்றிலேன் என நினைந்தோ"

என்று புலம்புகின்றாள். *(ஒட்உத்தர: 429)*

கணவன் உடலை எரியூட்டிவிட்டு இராவணனைச் சென்று கண்டு நீதி கேட்கப் புறப்படுகிறாள்.

"தாக்கியே காதலனைத் தரைப்படுத்த தசமுகனார்
நாக்கினை நான் பிடுங்கி என்தன் நடலை நோய் அதுதீரப்
போக்குவேன் என் உயிர் என்று சூர்ப்பணகை புறப்பட்டாள்"

(ஒட் உத்தர 432)

"உயிர்காக்கும் முலைப்பாலே உயிரை உண்ணும் நஞ்சானாற்போல, கொல்லத் தகாத, காக்கத்தக்க மைத்துனனைக் கொலை செய்த, புன்தொழில் வல்ல உன் அண்ணன் பெரும்பாவியாவான் என்று கூறி உலகத்தார் எல்லாம் என்னைத் துன்புறுத்தலால் நான் மிக வருந்துகிறேன்."

"முலைப்பாலே நஞ்சாகி முனைமுகத்து ஒருக்காலும்
கொலைப்பாலன் அல்லாத்தன் மைத்துனனைக் கொலை சூழ்ந்த
புலைப்பாவி உன்தமையன் பொல்லான் என்றெல்லாரும்
அலைப்பாலே அற அலைந்தேன் அண்ணாவோ அண்ணாவோ"

*(ஒட் உத்தர: 435)*

"காசுக்காக, பொன்னுக்காக, மோதிரம் முதலான அணிகளுக்காக, கடுஞ்சொல் மிகுதிக்காகச் சினம் கொண்டு மாப்பிள்ளைகள் கோபம் கொள்வார்கள். அவர்களைச் சமாதானம் செய்து போற்றுவார்கள்.

இதுவே உலகியல். ஆனால், மாப்பிள்ளையைக் கொன்று மண்ணில் புரட்டுவார்களோ?"

*(ஒட் உத்தர : 436)*

"மாப்பிள்ளை மிகையான குற்றங்களைச் செய்தாலும் அவற்றை விளையாட்டு என்று கருதுவதே யன்றி, ஒருபோதும் மைத்துனரோடு பகை கொள்வ தில்லை என்னும் அந்தப் பழமொழியையும் நீ எண்ணிப் பார்க்கவில்லையே! சிவபெருமானின் கயிலாய மலையைத் தூக்கி என்ன பயன்? ஓ! அண்ணா! என்ன கொடுமை செய்துவிட்டாய் !" *(ஒட் உத்தர: 437)*

"உன் குடியில் உன்னுடன் பெண்ணாகப் பிறந்த நான் பெருந்துன்பம் அனுபவிக்க நீ மகிழ்ச்சியுடன் உலகாளுதல் அரசர் குலத்துக்கு அறமா? சிறிதும் எண்ணிப் பார்க்காமல் என் கணவரைக் கொன்றாயே. இதைப் பார்த்த தேவர்கள் என்ன கூறுவார்கள்?"

"பெண்ணாகி உன்குலத்துப் பிறந்தாள் பேர்இடும்பை உற
அண்ணாநீ அரசாளல் அரசர்குலத்து அறன் ஆமோ?
எண்ணாது என் காதலனை இகலமருள் உயிர் உண்டாய்
விண்ணார் என் கூறுவர் என விம்மி வெய்துயிர்த்தாள்"

*(ஒட் உத்தர: 440)*

இராவணன் உண்மையறிந்து வருந்தித் தங்கையைச் சமாதானம் செய்து, விதியாரைத் தடுக்க வல்லார் உண்டோ என்று தேற்றித் தண்டகாரண்யத்தில் சகல வசதிகளும் செய்து தந்து, அவளை அங்கே இருக்கச் செய்கிறான் என்பது வரலாறு.

சாதாரணமாகவே மன ஆழம் காண இயலாது என்பார்கள். அதிலும், அரக்கியாகிய சூர்ப்பணகையின் அடிமனத்து வஞ்சமும் பழியுணர்வும் எத்தகையன என யாரால் அறிய இயலும்?

இராவண வதம் இயல்பாய் நடந்ததா? அல்லது, வீடணன் கூற்றுப்படி வஞ்சகச் சூர்ப்பணகை திட்ட மிட்டு, சூழ்ச்சி செய்து வஞ்சம் தீர்த்தாளோ? நாம் அறியோம். ஆனால் மண்டோதரி கூற்றுப்படி அச்சூர்ப் பணகை இழந்த மூக்கு புரந்தரனார் பெருந்தவமாய்ப் போயிற்று என்பதே உண்மை.

கம்ப சித்திரத்தின் சிறப்புக்குச் சிறப்புச் சேர்க்கும் அரிய படைப்பு சூர்ப்பணகை பாத்திரம்.

நாடகப் பாங்கும், நகைச்சுவைச் சிறப்பும், நயமான நளினமான உயரிய கவிதைகளும் நிறைந்து விளங்கும் சூர்ப்பணகைப் படலமும், சூர்ப்பணகை சூழ்ச்சிப் படலமும் கவிச்சக்கரவர்த்தியின் கவித்திறனுக்குச் சான்றாகத் திகழ்கின்றன.

# 5. அருந்தவத்து அரசி - சபரி

இராமகாதை நிகழ்ச்சிகளுள் மிக முக்கியமான ஒன்று இராம - சுக்ரீவன் நட்பு. இந்நட்பு உறுதிப் பட்டதால்தான், இராமபிரானுக்கு எழுபது வெள்ளம் வானர சேனையின் உதவியும், பேராற்றலும் பேரறிவும் படைத்த அனுமனின் பேருதவியும் கிடைத்தன. இராவண வதமும், சீதை மீட்சியும் எளிதாயின.

சுக்ரீவன் மற்றும் அனுமனின் உறவு இராமனுக்குக் கானகத்தில் தற்செயலாகக் கிடைத்த ஒன்று அன்று. அரக்கன் கவந்தனும் அருந்தவத்து அரசி சவரியும் கூறிய அறிவுரைப்படியே, வழிக்காட்டுதலின்படியே இராம லக்குவர் சுக்ரீவனைத் தேடி, அவன் இருப்பிடம் நாடிச் சென்றனர். நட்புக் கொண்டனர்.

இராமன் வலிமை வாய்ந்த வாலியை நட்புக் கொள்ளாமல், அவனுக்குத் தோற்றோடி, ரிசியமுக மலையில் ஒளிந்திருந்த சுக்ரீவனை நாடிச் சென்றது ஏன் என்ற வினா நமக்குள் எழலாம். வாலியே கூட, இராமனிடம் இந்த வினாவை எழுப்புகின்றான். இதற்கு ஒரே காரணம் சவரி காட்டிய அறநெறியே என்பதைச் சவரி பிறப்பு நீங்கு படலத்தைப் படிப்பவர்கள் நன்கு உணரலாம்.

கானகத்தில் சீதையைத் தேடி அலையும் இராம லக்குவர்கள் பேரரக்கனாகிய கவந்தனிடம் சிக்கு கின்றனர். அவனது தோள்களைத் துணிக்கின்றனர். சாப

விமோசனம் அடைந்து, பேரழகுடன் தேவ வடிவம் பெற்றுக் காட்சி தருகின்ற கவந்தன் இராமபிரானிடம், "நீ கூட்டு ஒருவரையும் வேண்டாக் கொற்றவன் என்ற போதிலும் பகைமேற் செல்கையில் தக்க துணையுடன் செல்லுதலே நல்லது. கொடியவர்களைத் துணைவராகக் கொள்ளாமல், நல்லவர்களைத் துணையாகக் கொள்க. எல்லா உயிர்களுக்கும் தாயைவிட அதிக அளவில் அன்பு காட்டும் சவரி என்பவளைச் சந்தித்து, அவள் சொல்லுகின்ற வழியிலே சென்று, ரிசியமுக மலைமீது ஏறி, சூரியனுக்கு மகனான, பொன்போன்ற ஒளி பொருந்திய நிறத்தோடு திகழும் சுக்ரீவனைச் சந்தித்துத் தழுவிக்கொண்டு, அவனோடு இனிய முறையில் நட்புக் கொண்டு அவனது துணையால் சீதையைத் தேடுவது சிறந்தது" என்று கூறுகின்றான்.

"ஆயது செய்கை என்பது அறத்துறை நெறியின் எண்ணித்
தீயவர்ச் சேர்க்கிலாது செவ்வியோர்ச் சேர்த்துச் செய்தல்
தாயினும் உயிர்க்கு நல்கும் சவரியைத் தலைப்பட்டு அன்னாள்
ஏயது ஓர்நெறியின் எய்தி, இரலையின் குன்றம் ஏறி"

"கதிரவன் சிறுவன் ஆன கனக வாள் நிறுத்தி னானை
எதிரெதிர் தழுவி நட்பின் இனிதமர்ந்து அவனின் ஈண்ட
வெதிர்பொரும் தோளி னாளை நாடுதல் விழுமிது என்றான்.
அதிர்கழல் வீரர்தாமும் அன்னதே அமைவது ஆனார்"

கவந்தன் படலம்

கவந்தனின் கூற்றுப்படி, இராமலக்குவர் சவரி வாழும் மதங்க முனிவனது மலைக்குச் செல்கின்றனர். புண்ணியம் புரிந்தோர் வைகும் துறக்கமே போன்ற மதங்கனது தவப்பள்ளியை அடைகின்றனர்.

தனக்கு உவமை இல்லாத தனிப்பெரும் மூலப் பொருளாகத் திகழும் இராமன், அத்தவப்பள்ளியில் அளவில்லாத நீண்டகாலமாகத் தன்னையே நினைத்துத் தவம் செய்யும் சவரியைச் சந்தித்தான். அவளுக்கு இன்னுரை அருளி, "நீ எவ்வகையான துன்பமும் இல்லாமல் நலமாக உள்ளனையோ?" என நலம் விசாரித்தான்.

அப்பொழுது, சவரி பக்தியோடு இராமனைத் துதித்து அவனைத் தரிசித்த மகிழ்ச்சியில் அழுது அருவி யாகக் கண்ணீர் பெருக்கி, "உன்னைத் தரிசித்ததால் எனது பொய்யான உலகப் பற்று அழிந்தது. அளவற்ற நெடுங்காலமாக நான் மேற்கொண்ட தவத்தின் பயன் இப்போது கிடைத்தது" என்று கூறி, அவர்கள் உண்பதற்குத் தேவையான காய்கனி முதலியவற்றைக் கொண்டுவந்து விருந்து படைத்தாள்.

"ஆண்டு அவள் அன்பின் ஏத்தி அழுதுஇழி அருவிக்கண்ணள்
மாண்டது என் மாயப் பாசம்; வந்தது வரம்பில் காலம்
பூண்ட மாதவத்தின் செல்வம்; போயது பிறவி என்பாள்
வேண்டிய கொணர்ந்து நல்க விருந்து செய்து இருந்த வேலை!

இந்தச் சபரி குறித்து, 'எந்தரோ சபரி பாக்யமு,' 'எந்த நின்னே வர்ணிந்துனு சபரி பாக்யமு' என்று இரண்டு கீர்த்தனைகளை ஸ்ரீ தியாகராஜர் பாடி யுள்ளார்.

இராமபிரானைப் பார்த்துச் சவரி "என் தந்தையே! சிவபெருமானும் பிரமனும் இந்திரனும் தேவர்கள் பலரும் இங்கு வந்து, என்னைப் பார்த்து மகிழ்ந்து, 'உனது மாசற்ற தவத்தின் பயனாக நீ வீடுபேறு பெறும் காலம் நெருங்கி விட்டது. இராமன் இங்கு வருவதை எதிர்பார்த்திருந்து, அவன் வரும்போது அவனுக்கு உரிய

உபசாரங்களை விரும்பிச் செய்து. பிறகு எம் உலகத்துக்கு வருக' என்று கூறிச் சென்றனர். என் தந்தையே! நீ இங்கே வரப்போகிறாய் என்னும் செய்தி என் மனத்தில் பொருந்த உன் வருகையை எதிர் பார்த்துக் காத்திருந்தேன். நீ வந்து விட்டதால் இன்று தான் என் தவம் பலித்தது" என்று கூறினாள்.

"ஈசனும் கமலத் தோனும் இமையவர் யாரும் எந்தை
வாசன் தானும் ஈண்டு வந்தனர் மகிழ்ந்து நோக்கி
ஆசறு தவத்திற்கு எல்லை அணுகியது இராமற்கு ஆய
பூசனை விரும்பி எம்பால் போதுதி என்று போனார்"

"இருந்தனென் எந்தை நீ ஈண்டு எய்துதி என்னும் தன்மை
பொருந்திட இன்றுதான் என் புண்ணியம் பூத்தது என்ன"

இராமன் அரிய தவத்துக்கு அரசியான அவளை அன்போடு பார்த்து, "தாயே! வழிநடையால் உண்டான எங்களது வருத்தத்தை உன் இனிய விருந்தோம்பலால் நீக்கி விட்டாய். நீ வாழ்வாயாக" என்று பாராட்டினான்.

"அருந்தவத்து அரசி தன்னை அன்புற நோக்கி எங்கள்
வருந்துறு துயரம் தீர்த்தாய் அம்மனை வாழி என்றார்"

குற்றமற்றவனான இராமனும் இலக்குவனும் அன்று அந்தத் தவப்பள்ளியில் தங்கி இருந்தனர். காலையில் சவரி அவர்களை மெய்யன்புடன் பார்த்து, வேகமாகச் செல்லும் குதிரைகள் பூட்டப்பட்ட தேரை உடைய வெம்மை மிகுந்த சூரியனின் புதல்வனான சுக்ரீவன் தங்கியிருந்த அழிவற்ற ரிசியமுகம் என்னும் மலைக்குச் செல்வதற்கான அரிய வழிகளை எல்லாம் விளக்கமாகச் சொன்னாள்.

"துணைபரித் தேரோன் மைந்தன் இருந்தஅத் துளக்கில் குன்றம்
நினைவரிது ஆயற்குஒத்தநெறியெலாம் நினைந்து சொன்னாள்"

சுக்ரீவன் இருப்பிடத்திற்கு வழிசொல்லி அவனது நட்பைப் பெறுமாறு சவரி அறிவுறுத்தும் இச் செய்தியைக் கூற வந்த கம்பநாடன்,

“மோட்ச உலகுக்குப் போவதற்கு உரிய உண்மை யான நெறியை வெளிப்படையாகத் தெரிவிக்கின்ற ஞானாசிரியன் போல,” இராமனுக்குச் சவரி உப தேசித்தாள் என்று கூறுவதை நோக்குக.

“வீட்டினுக்கு அமைவதான மெய்ந்நெறி வெளியிற்றாகக்
காட்டுறும் அறிஞர் என்ன அன்னவள் கழறிற்று
எல்லாம் கேட்டனர்.”

கவந்தனாலும், அருந்தவத்து அரசி சவரியாலும் அறிவுறுத்தப் பட்டமையாலேயே, சுக்ரீவன் நல்லவன்; அவன் நட்பு மிக இன்றியமையாதது என்று தேர்ந்து இராமலக்குவர் அவன் நட்பைப் பெற்றனர் என அறிய முடிகின்றது.

பிறகு, சவரி மெய்வருந்திச் செய்து பெற்ற தவத்தின் பயனாலே, தனது உடம்பை விட்டு நீங்கி ஒளி வடிவோடு ஒப்பற்ற மோட்ச உலகத்தை அடைந்தாள். அதைக் கண்ட இராமலக்குவர் அளவற்ற வியப்பும் மகிழ்ச்சியும் அடைந்தனர். பின்னர், அவள் உரைத்த வழியில் ரிசியமுகமலை நோக்கிச் சென்றனர்.

“பின் அவள் உழந்து பெற்ற யோகத்தின் பெற்றியாலே
தன் உடல் துறந்து தான் அத் தனிமையின் வீடு சார்ந்தாள்
அன்னது கண்ட வீரர் அதிசயம் அளவின்று எய்தி
பொன்னடிக் கழல்கள் ஆர்ப்பப் புகன்ற மாநெறியில் போனார்”

கவந்தன் படலத்தில் இரண்டு பாடல்கள், சவரி பிறப்பு நீங்கு படலத்தில் எட்டுப் பாடல்கள், சவரி பற்றி நாம் அறிய மிகக் குறைந்த அளவே கம்பன் கவிதைகள் உள்ளன.

வால்மீகி இராமாயணத்தில் அவளது முற்பிறவி பற்றிய கதை ஒன்று கூறப்படுகிறது. முற்பிறவியில் சவரி ஒரு நாட்டின் அரசியாக இருந்தாள். தன்னுடைய செல்வத்தைக் கொண்டு ஆடம்பரமாக வாழாமல் பலருக்குத் தொண்டு செய்தாள். மகான் ஒருவரைச் சந்தித்து மறுபிறவியில், முனிவர்களுக்குத் தொண்டு செய்யும் பாக்கியத்தைப் பெற வேண்டும் என்று அருள் பெற்றாள். திரிவேணியில் தன் உயிரைவிட்டாள். அவள் மறு பிறவியில் சபர் என்னும் மலை சாதியினர் மரபில் தோன்றினாள். சபரி என அழைக்கப்பட்டாள். கன்னிப் பருவத்தில் அவளுக்குத் திருமண ஏற்பாடுகள் தொடங்கின. திருமணத்தில் பலியிட்டு விருந்து வைப்பதற்காக இரண்டு ஆடுகளை வீட்டில் கொண்டு வந்து கட்டி வைத்திருந்தனர்.

சபரி அதைக் கண்டு திடுக்கிட்டாள். உயிரைக் கொல்ல அவள் விரும்பவில்லை. எனவே, அவள் நள்ளிரவில் வீட்டைவிட்டு வெளியேறினாள். பம்பா நதிக்கரையில் உள்ள மதங்க முனிவரின் ஆசிரமத்தை அடைந்தாள்.

மதங்க முனிவர் இராம நாம மந்திரத்தை அவளுக்கு உபதேசித்தார். பின்னர் அவர் பிரமலோகம் செல்லும் போது, "இராம நாமத்தை நாள்தோறும் உச்சரித்து வா. ஒருநாள் இராமர் கட்டாயம் உன் வீட்டுக்கு வருவார்" என்று கூறினார்.

மதங்கர் கூறியபடி நாள்தோறும் இராமனின் வருகையை எதிர்நோக்கிக் காத்திருந்தாள். அவருக்காகப் பழங்களைக் கொண்டு வந்து வைப்பாள். இரவு வரை பசியோடு காத்திருப்பாள். இராமர் வராததால் இரவில் இராமப் பிரசாதமாக அப்பழங்களை மட்டும் உண்பாள்.

இவ்வாறு ஆண்டுகள் பல கடந்தன. அவள் முதுமை அடைந்தாள். இருப்பினும் மனம் தளராமல் அவருக்காக அனுதினமும் பழங்களுடன் காத்திருந்தாள். இராமர் வந்தார். அவள் எண்ணம் நிறைவேறியது. கனிகள் தந்து உபசரித்தாள். சுக்ரீவன் பற்றிக் கூறி, அவனது இருப்பிடத்துக்கு வழி உரைத்தாள். பின்னர், மகிழ்வுடன் இராமன் முன்னிலையிலேயே, தனது மெலிந்த உடலை அக்னியில் போட்டு உயிர் துறந்தாள். மோட்ச உலகை அடைந்தாள்.

கம்பனோ, வால்மீகியோ இருவரும் கூறும் பாங்கு நோக்கின், சவரி அன்பே உருவானவள்; அருந்தவத்து அரசி; நீண்டகாலமாக இராமன் வரவை எதிர்நோக்கித் தவமிருந்த தவ மூதாட்டி; சிவபெருமானும், பிரமனும், தேவேந்திரனும், பிற தேவர்களும் போற்றிய தவச் செல்வி. இராமனை நேரில் கண்டு, உபசரித்து, விருந்து நல்கி, சுக்ரீவ நட்புக்கு வித்திட்டு, இராமன் முன்னிலையில் மோட்சவீடு பெற்ற மாதரசி என்பதை நாம் அறிந்து மகிழ்கின்றோம்.

"வேண்டிய வேண்டியாங்கு எய்தலால் செய்தவம்
ஈண்டு முயலப் படும்" (265)

# 6. கம்பனில் ஞாயிறு

சூரியகுலத்துத் தோன்றல் இராமன். அதனால் தானோ என்னவோ, கவிச்சக்கரவர்த்தி கம்பர் தம்மால் படைக்கப்படாத பாத்திரமாகச் சூரியன் இருந்த போதும், தமது இராமகாதையில் சூரியனுக்குத் தனி முக்கியத்துவம் அளித்துப் பல கவிதைகளைப் படைத் துள்ளார் போலும். குல முதல்வன் என்ற முறையிலும், காலையில் தோன்றி மாலையில் மறையும் காட்சி வடிவாலும் ஞாயிற்றின் பல்வேறு வருணனைகளை மிக அருமையாகப் படம்பிடித்துக் காட்டுகிறார் கம்பர். இடம் கருதி ஒரு சில காட்சிகளை மட்டும் ஈண்டுக் காண்போம்.

காலை வேளையில் உதயகிரியில் தோன்றும் காட்சி, ஆயிரம் கரங்களுடன் தூணைப் பிளந்து கொண்டு, இரணியனைக் கொல்லத் தோன்றிய நரசிம்ம மூர்த்தியைப் போல இருந்தது என்று வருணிக்கிற கம்பரது கவித்திறன் வியந்து நோக்கற்பாலது.

மீனுடை எயிற்றுக் கங்குல் கனகனை வெகுண்டு வெய்ய
கானுடைக் கதிர்கள் என்னும் ஆயிரம் கரங்கள் ஓச்சித்
தானுடை உதயமென்னும் தமனியத் தறியுள் நின்று
மானுட மடங்கல் என்னத் தோன்றினன் வயங்கு வெய்யோன்

*(பால. பூக்கொய்படலம் 839)*

சூரியன் மறைகிறான். அக்காட்சியை வருணிக்க முற்படுகிறார் கம்பர். பொதுவாகத் தாம் விரும்பும்

ஒருவர் ஒரு செயலைச் செய்தால் அதைப் பார்த்து அதைப் போலவே செய்ய முற்படுதல் உலகோர் வழக்கு. இதனைப் 'போலச் செய்தல்' என்பர் ஆன்றோர். "காதலர்களும் காதலியர்களும் நீரில் நீந்தி விளையாடி மகிழ்ந்து கொண்டிருக்கின்றனர். அதைப் பார்த்த சூரியன் தானும் அதுபோலவே நீராடி மகிழ விரும்பி மாலை வேளையில் நீலக் கடலில் மறைந்தான்" என்று பாடுகிறார் கம்பர்.

"மானின் நோக்கியர் மைந்தரொடு ஆடிய
ஆன நீர்விளை யாடலை நோக்கினான்
தானும் அன்னது காதலித் தான்என
மீன வேலையை வெய்யவன் எய்தினான்"

*(பால. புனல் விளையாட்டுப் படலம் 909)*

இராமனுக்கும் சீதைக்கும் மிதிலையில் திருமணம். ஞாயிறு காலையில் உதிக்கிறது. தன் குலத்தோன்றலாகிய இராமனது திருமணக் கோலம் காணும் ஆவலுடன் தோன்றுகிறானாம் சூரியன்.

"செஞ்சுடர் இருள்கீறித் தினகரன் ஒரு தேர்மேல்
மஞ்சனை அணிகோலம் காணிய என வந்தான்"

*(பால. கடிமணப்படலம் 1127)*

அயோத்தியா காண்டத்தில் வரும் கதிரவன் காட்சிகள் அனைத்தும் மிக அற்புதமான வருணனைகள். தசரதனிடம் வரம் பெற்றுவிட்டாள் கைகேயி. ஒரே இரவில் தலைகீழ் மாறுதல். முடி சூட வேண்டிய இராமன் காடு செல்லப் போகிறான். தசரதன் இறக்கப் போகிறான். நாட்டுமக்கள் நிலைகுலையப் போகின்றனர். கைகேயியின் செயல்கண்டு முகம் சிவந்து கடுங் கோபத்துடன் கிழக்கே உதிக்கின்றானாம் கதிரவன்.

"தூபம் முற்றிய கார்இரும்பகை துள்ளி ஓடிட உள்எழும்
தீபம் முற்றவும் நீத்துஅகன்றன சேயது ஓர் உயிர்தேய வெம்
பாபம் முற்றிய பேதைசெய்த பகைத் திறத்தினில் வெய்யவன்
கோபம் முற்றி மிகச் சிவந்தனன் ஏத்தனன் குணக் குன்றிலே"

*(அயோ. கைகேயி சூழ்வினைப்படலம்: 241)*

அதே மாலையில் சூரியன் மறைகின்ற காட்சியை வருணிக்கப் புகும் கம்பர், இராமன் காடு செல்லும் காட்சியைக் காணச் சகிக்காதவனாய் மறைவதாகக் கவிதை ஓவியம் வரைகிறார்.

"கான்புகக் காண்கிலேன் என்று கல்லதர்
தான் புக முடுகினன் என்னும் தன்மையான்"

*(அயோ. தைலமாட்டு படலம்: 527)*

தசரதன் இறந்துவிட்டான். இராமலக்குவர் காட்டில். பரத சத்ருக்கனர் மாமன் வீட்டில். நாட்டை ஆள யாருமில்லை. இந்நிலையில் மிக வேகமாகக் கிழ்த் திசையில் உதயமாகி மேலேறுகிறான் கதிரவன். இக் காட்சி எப்படி இருக்கிறதாம்?

"வானேபுக்கான் அரும் புதல்வன் மக்கள் அகன்றார் வருமளவும்
யானே காப்பேன் இவ்வுலகை என்பான்போல எறிகதிரோன்"

*(அயோ. தைலமாட்டு படலம்: 601)*

காட்டில் பரதன் வாயிலாகத் தசரதன் மறைவுச் செய்தி கேட்ட இராமன் மனம் வருந்தி, புலம்பி, ஒருவாறு தெளிவு பெற்றுத் தந்தைக்கு நீர்க்கடன்கள் செய்கின்றான். இந்நிலையில் கதிரவன் கடலில் மூழ்கினான். தசரதனுக்கு அவனும் நீர்க்கடன் ஆற்றுவது போல இருந்ததாம் அந்தக் காட்சி.

"தடம்செய் தேரினான் தானும் நீரினால்
கடம்செய்வான் எனக் கடலில் மூழ்கினான்"

*(அயோ. திருவடி சூட்டு படலம் 1150)*

ஆரணிய காண்டம். சடாயு உயிர்நீத்த படலம். இராமன் சடாயுவுக்கு உரிய இறுதிச் சடங்குகள் அனைத்தையும் உரிய முறைப்படி செய்து முடிக்கின்றான். அச்சமயம், சூரியன், தொன்றுதொட்டு வரும் காசிப குலத்தில் தோன்றிய சடாயுவின் மரணம் காரணமாக நேர்ந்த துன்பத்தால் தானும் நீராடி அவன் செல்லும் கதிக்கு உதவுகின்ற சடங்குகளையெல்லாம் செய்பவன் போல மேல்கடலை அடைந்தான் என்கிறார் கம்பர். இடத்திற்குப் பொருத்தமாக இயற்கைக்காட்சியை இணைக்கும் கம்பரின் ஆற்றல் நினைக்கற்பாலது.

"பல்வகைத் துறையும் வேதப் பலிக்கடன் பலவும் முற்றி
வெல்வகைக் குமரன் நின்றவேலையின் வேலை சார்ந்தான்
தொல்வகைக் குலத்தின் வந்தான் துன்பத்தால்புனலும் தோய்ந்து
செல்வகைக்கு உரியஎல்லாம் செய்குவான் என்ன வெய்யோன்"

*(ஆரணிய. சடாயு உயிர்நீத்த படலம்: 1024)*

இன்னொரு காட்சி. சீதையைத் தேடி அலைகின்றனர் இராமலக்குவர். வெம்மையான கதிர்களை உடைய சூரியன் அவர்களது மனத்துயர் அறிந்து, தனது கதிர்களை உலகெங்கும் வீசி, தானும் ஓடி ஓடித் தேடி அலைந்து திரிந்தான். சீதையைக் கண்டுபிடிக்க முடியாத மனத்துயரை மேருமலையில் மறைந்து போனானன்ன என்று வருணிக்கிறார் கம்பர்.

"ஆரியர் சிந்தை அலக்கண் அறிந்தான்
நாரியை எங்கணும் நாடினன் நாடி
பேர்உலகு எங்கும் உழன்று இருள் பின்னா
மேருவின் வெங்கதிர் மீலா மறைந்தான்"

*(ஆரணிய. அயோமுகிப் படலம்: 1059)*

கிட்கிந்தா காண்டம், அரசியற்படலம். வாலிவதம் முடிந்து, சுக்ரீவனுக்கு முடிசூட்டு விழா. ஞாயிறு உதயமாகிறது. ஞாயிற்றின் மகன்தான் சுக்ரீவன். தன்

மகனின் முடிசூட்டும் விழாவைக் காண மிக்க மகிழ்ச்சியுடன் வரும் சூரியன், அம் முடிசூட்டு விழாவிற்குத் துணையாகின்ற திருமால் விரைவில் வந்து சேரும்படி, அவன் வீற்றிருக்கும் இடமான தாமரை மலர்களின் இதழ்களாகிய கதவுகளைத் தன் சிவந்த கைகளால் திறந்து விடுகிறானாம். சூரியனின் வரவும் தாமரை மலர்களின் மலர்ச்சியும் இயல்பு. கம்பரின் கை வண்ணத்தில் இக்காட்சி அழகிய கவிதையாகிறது.

"புதல்வன் பொன் மகுடம் பொறுத்தலால்
முதல்வன் பேருவகைக்கு முந்துவான்
உதவும் பூமகள் சேர ஒன்மணலர்க்
கதவம் செய்ய கரத்தின் நீக்குவான்"

(இராமன் மகிழ, இலக்குமியாகிய சீதை அவனை விரைவில் சேர உதவிட அவள் வாழும் தாமரை மலர்களைத் திறந்து தேடினான் என்றும் கொள்ளலாம்)

கார்காலப்படலம். இனிமேல்தான் அனுமன் இராம தூதனாகச் சீதையைத் தேடிச்செல்லப் போகிறான். அதற்கு முன்னமே இராமன் தென்திசைக்கு அனுப்பிய தூதன் போலக் கதிரவன் வடதிசையினின்றும் தெற்குத் திக்கிற்குச் செல்லத் தொடங்கினான் என்கிறார் கம்பர்.

"மாவியல் வடதிசை நின்று வானவன்
ஓவியமே என ஒளிக் கவின் குலாம்
தேவியை நாடிய முந்தி தென்திசைக்கு
ஏவிய தூதென இரவி ஏகினான்"

*(கிட்கிந்தா கார்காலப்படலம்: 440)*

சுந்தர காண்டத்தில் மிக அருமையான காட்சி ஒன்று. தன்னிடம் இருந்த சூளாமணியைச் சீதை அனுமனிடம் அடையாளமாகத் தந்து அனுப்பி விட்டாள். இப்பொழுது கதிரவன் தோன்றும் காட்சி. கம்பரின் வருணனை அற்புதமாக அமைகிறது. தன் மற்ற

அணிகலன்களை வீசி எறிந்தபோது, எறியாமல் தன்னிடம் வைத்திருந்த மிக்க ஒளியுடைய சூளா மணியாகிய அரசமணியைத் தன் உயிர் போன்ற இராமனுக்கு அடையாளமாகச் சீதை கொடுத்து விட்டாள். ஆதலால், ஐயோ! இப்போது ஓர் அணி கலனும் இல்லாதவள் ஆனாள் என்று நினைத்து அலைவீசும் கடலானது, செறிந்த கூந்தலை உடைய சீதைக்குத் தலையில் அணிவதற்கு உரிய மற்றொரு சூளாமணியை ஆராய்ந்து எடுத்துக் கொடுப்பது போலச் சூரியன் கீழ்க்கடலில் தோன்றினான்.

"உறுசுடர் சூடைக்காசுக்கு அரசினை உயிர் ஒப்பானுக்கு
அறிகுறியாக விட்டாள் ஆதலான் வறியள் அந்தோ
செறிகுழல் சீதைக்கு அன்றுஓர் சிகாமணி தெரிந்து வாங்கி
எறிகடல் ஈவதென்ன எழுந்தனன் இரவி என்பான்"

*(சுந்தர.பொழில் இறுத்த படலம்: 738)*

யுத்த காண்டத்தில் சூரிய உதயமும் மறைவும் பல்வேறு இடங்களில் மிகச் சிறப்பாகப் பேசப் படுகின்றன. இராவணனுக்கு அஞ்சி, இத்தனை நாளும் ஊருக்குள் வராமல் மதிலைச் சுற்றிக்கொண்டு சென்ற சூரியன், இராமன் வரவால், நாம் இப்போது மிக வலிமை பெற்றோம் என்று மிக உற்சாகத்துடன் இலங்கையை முதன்முதலாகக் காணும் வேகத்தோடு உதயம் செய்தான்.

"இன்னதோர் தன்மைத்தாம் என்று எட்டியும் பார்க்க அஞ்சி
பொன்மதில் புறத்துநாளும் போகின்றான் போர் மேற்கொண்டு
மன்னவர்க்கு அரசன்வந்தான் வலியமால் என்று தானும்
தொல்நகர் காண்பான் போலக் கதிரவன் தோற்றம் செய்தான்"

*(யுத்த. ஒற்றுக்கேள்விப்படலம்: 776)*

இலக்குவனுக்கும் இந்திரசித்தனுக்கும் கடுமையான போர். இலக்குவன் மீது இந்திரசித்தன் பிரம்மாத்திரம்

செலுத்தப் போகும் நிகழ்ச்சிக்கு முன் சூரியாஸ்தமனம். "தூயவனான இலக்குவன் மீது அந்த இந்திரசித்து பிரம்மாத்திரம் செலுத்துவதைக் கண்டு பொறுக்க மாட்டேன். அதற்கு முன்பு மறைவது நல்லது" என்று சூரியன் மறைந்தானாம்.

"தீர்த்தன்மேல் அவன் திசைமுகன் படைக்கலம் செலுத்தப்
பார்க்கிலேன் முந்திப்படுவதே நன்றெனப் பட்டான்"

*(யுத்த. பிரமாத்திரப்படலம் 2468)*

இராமனுக்கு முடிசூட்டு விழா. கதிரவன் உதயம். "இராமன் இராவணனை வென்று பூமகளும் திருமகளும் மகிழ முடிசூடும் வேளையில் அந்த மணி மகுடத்துக்குப் பொருத்தமான, முடியின் மீது பதித்தற்கேற்ற, விலைமிக்க மாணிக்கத்தைக் கிழக்குத் திக்கிற்குரிய இந்திரன் பொருந்துமாறு எடுத்ததைப் போலக் கதிரவன் உதித்தான்" என்று வருணிக்கிறார் கம்பர்.

இராவணன் வேட்டம் போய் மீண்டு எம்பிரான் அயோத்தி எய்தி
தராதல மகளும் பூவின்தையலும் மகிழச் சூடும்
அராவுபொன் மெளலிக்கு ஏய்ந்தசிகாமணி குணபால் அண்ணல்
விராவுற எடுத்தாலென்ன வெய்யவன் உதயம் செய்தான்

*(யுத்த. மீட்சிப்படலம்: 4180)*

'கம்பனில் ஞாயிறு' கட்டுரைக்காகக் கம்பராமாயணம் முழுவதும் தேடித்துருவி முதலில் நாற்பது பாடல்களைத் தேர்ந்தெடுத்தேன். பிறகு, அவற்றுள் இருபது பாடல்களைக் குறித்து வைத்தேன். ஆனால், இடம் கருதி இக்கட்டுரையில் பதினைந்து பாடல் களையே மேற்கோள் காட்டியுள்ளேன்.

கம்பனின் கவிதையாம் பாற்கடலில் மூழ்கி இயற்கை வருணனைகளாகிய நன்முத்துகளைத் தேர்ந்து சுவைத்து மகிழ்வோமாக.

# 7. வில்லும் சொல்லும்

'ஒருசொல், ஒருஇல், ஒருவில்' என்று வாழ்ந்து காட்டிய உத்தமன் இராமன். 'ஒகமாட ஒகபாண ஒகபத்னிவ்ருதுடே மனஸா' என்று இராமபக்தி வெள்ளத்தில் திளைத்த ஸ்ரீ தியாகராஜரும் பாடினார். இராமன் எத்தனை இராமன் ஆனால் என்ன, 'கோதண்ட' ராமன் தானே 'ஜய' ராமன் ஆக முடிந்தது! அந்தக் கோதண்ட வில்லை, அதன் ஆற்றலைப் புகழாதார் யார்? காகுத்தனின் கைவண்ணத்தைக் கம்பனின் கவி வண்ணம் அழகுறக் காட்டுகிறது.

## வேடனின் வில்லும் முனிவனின் சொல்லும்

வால்மீகி முனிவர், இராம காவியத்தைத் தொடங்குவதே வில்லும் சொல்லும் சேர்ந்த இடத்தில்தான்! வேடன் ஒருவன் வில் எடுத்தான். கணை தொடுத்தான். மோகமாயிருந்த இணை அன்றிலில் ஒன்றைத் தன் அம்பால் அடித்து வீழ்த்தினான். முனிவர் கண்டார்: கோபம் கொண்டார்.

"மாநிஷாத ப்ரதிஷ்டாந்த்வம் அகம்ஸ்
ஸாஸ்வதீஸ் ஸமா
ய: க்ரௌஞ்ச மிதுனாத் ஏகம்
அவதீ காம மோஹிதம்"

என்று வசை பாடிவிட்டார். வில்லின் கணை எப்படிக் குறி நோக்கிச் சென்று, விரைந்து, பறவையை

வீழ்த்திற்றோ, அதுபோலச் சுடுசரமாகச் சாபச் சொல் விரைந்து வந்தது. 'முன் இணையாகிய அன்றிலில் மோகம் கொள் ஆணினைக் கொன்றனை. பன்னாள் நீ இனி வாழ்கலை வேடனே!' என்று முனி மொழிந்த சாபச் சொல் நாமகள் அருளால் நன்மொழியாக, மங்களா சாசனமாக மாறி, இராம காதை மலர்ந்தது என்று வரலாறு. வில்லுக்கும் சொல்லுக்கும் தொடர்புண்டு என்பதற்கே இந்தப் பீடிகை!

## வில் உழவரும் சொல் உழவரும்

அறிவை உழுபவர் (புலன் உழுதுண்மார்), வயலை ஏர்கொண்டு உழுபவர், போர்க்களத்தே உழுபவர் என்று உழவர்கள் பலர்! அறிவுப் புலத்தை அருஞ்சொற்களால் உழுது, ஞானப் பயிர் விளைவிப்பவர் சொல்லேர் உழவர். கலப்பையால் வயலை உழுது பயிர் விளை விப்பவர், மூலமான உழவர். வாள், வில், வேல் ஆகியவற்றால் பகைவர் மார்பாம் களங்களை உழுது, வெற்றிப் பயிரை அறுவடை செய்யும் வீரர் வாள் உழவர், வில்லேர் உழவர், அயில் உழவர் எனப் பட்டனர்.

'வில்லேர் உழவர்பகை கொளினும் கொள்ளற்க
சொல்லேர் உழவர் பகை.'

'வில்லம்பு பட்டபுண் வேதனை தராது என்றும்
சொல்லம்பு சுட்ட துன்பம் மாறாது.''

'தீயினால் சுட்டபுண் கூட ஆறிவிடலாம். நாவி னால் சுட்ட வடு ஆறுவது ஏது?' என்னும் வார்த்தைகள் வில்லின் ஆற்றலைவிடச் சொல்லுக்கு மகத்துவம் அதிகம் என்று காட்டுகின்றன. கம்பனோ, வில்லையும் சொல்லையும் இணைத்துக் காட்டும் அற்புதச் சித்தன்.

## சொல் ஒக்கும் சுடுசுரம்

அறம் தலை நிறுத்த வந்த ஆதிபிரான் அறை கழல் இராமன் ஆகி மந்திரம்கொள் மறைமுனிவன் வேள்வி காக்க நடக்கிறான். அல்லொக்கும் நிறத்தினாளான தாடகை மார்பில் அண்ணலின் கணை பாய்கிறது. அவ்வரக்கி மார்பைத் துளைத்து, அப்புறத்தே சுழன்று விழுந்தது என்பதைக் கவிஞன் காட்டும் அழகே அழகு!

"சொல்ஒக்கும் கடியவேகச் சுடுசரம் கரிய செம்மல்!
அல்ஒக்கும் நிறத்தி னாள்மேல் விடுதலும், வயிரக் குன்றக்
கல்ஒக்கும் நெஞ்சில் தங்கா தப்புறம் கழன்று கல்லாப்
புல்லர்க்கு நல்லோர் சொன்ன பொருளெனப் போயிற் றன்றே!"

கணையும் சொல்லும் ஒப்புமையுடையன. சொல்லும் தைக்கும், சரமும் தைக்கும். தாடகை மார்பில் பட்ட அம்பு தங்காது புறத்தே போயிற்று. எது போல? கல்லாத புல்லர்க்கு நல்லோர் சொல்லும் பொருள் போல! கற்றவன் அற்பனாயிருந்தால், அடுத்தவன் என்ன என்ன பிழை சொல்கிறான் என்று கண்டுபிடிக்கவாவது போய்க் கேட்பான். கல்லாதவன் நல்லவன் என்றால் 'நமக்குத் தான் கற்றறிவு இல்லை. அடுத்தவர் வாய்ச் சொல்லையாவது கேட்போம் என்று கேட்பான். 'கல்லாத புல்லன்' கேட்கவும் மாட்டான்; கேட்டாலும் அவன் நெஞ்சில் அது தங்காது என்று கூறுகிறார் கம்பர்.

## வில் விழுந்ததும், சொல் எழுந்தது

பாரதப் போர் தொடங்கியதும், வீர அருச்சுனன் மாயையால் மதிமயங்கி, பாசத்தால் நிலை கலங்கி, எதிரேயிருந்த உற்றார் உறவினரைக் கொல்வதா என்று தயங்கியபோது அவன் கையிலிருந்த காண்டீப வில் நழுவியது. அப்போது கண்ணனின் சொல்லான கீதை

எழுந்தது. அதுபோல், போர்க்களத்தில் தசமுகனின் வில் விழுந்ததும் இராமனின் கருணைச் சொல் பிறந்தது. முதல்நாள் போரில் ஆயுதம் அனைத்தையும் இழந்து ஆலம்விழுது போல் இருபது கைகளும் தொங்கிட, அவமானத்தால் தரை நோக்கி நின்ற இராவணனைப் பார்த்துக் காகுத்தனின் சொற்கள் பண்பாட்டுடன் கருணை மொழியாக மலர்கின்றன.

"ஆள்ஐயா! உனக்கமைந்தன மாருதம் அறைந்த
பூளை யாயின கண்டனை"

ஆதலால்,

"இன்றுபோய் போர்க்கு நாளை வா"

என உயிர்ப்பிச்சை நல்குகிறான் கார்முகில் வண்ணன். வில் விழுந்ததும் சொல் எழுந்த அற்புதத்தைவிட இந்த வில்லாற்றலைச் சொல்லாற்றலுடன் தசமுகன் ஒப்பிடும் அற்புதம் பெருஞ் சிறப்புடையது.

## அம்பு செய்த அற்புதம்

வயக்களிற்றின் கோடு உழுத மார்பும், கொலை யுழுத வடிவேலின் கொற்றம் அஞ்சித் தாள் தொழுத பகை வேந்தர் முடி உழுத தழும்பிருந்த சரணமும் உடைய இலங்கை வேந்தன், தோற்றிலா விறலோன், முதல் போரிலேயே இராமனிடம் தோற்று வருகிறான்.

பாட்டன் மாலியவான், 'என்ன நேர்ந்தது?' என்று கேட்கிறான். அருஞ்சுவைத்தான வெல்லப்பாகு என்ன, அமுதமே நாவில் பட்டாலும் சுவை தெரியாத அளவுக்கு நாவறண்டு கிடக்கிற தசகண்டன் பதில் பேசுகிறான்.

"நவையறு பாகை யன்றி
அமுதினை நக்கினாலும்
சுவையறப் புலர்ந்த வாயான்
இனையனசொல் லுற்றான்"

பதினேழு பாடல்களில் இராமனின் போர்த் திறத்தைப் பாராட்டுகிறான். இலக்குவனின் வில்லாற்றலையும் புகழ்கிறான்.

"அரக்கர் குழுவை அழித்து அழித்து இராமன் பகழி என் இருபது தோளிலும் அவமானத்தைப் பொறித்து விட்டது. அந்தப் பகழிகளை அவன் மிக்க பிரயாசையுடன் ஏவவில்லை. கூனி முதுகில் விளையாட்டாக மண்ணுருண்டை போட்டது போலவே, சினமின்றி எளிதாக ஏவுகின்றான். அந்தப் பாணத்தின் வெப்பம் அது குறித்துப் பேசும் என் நாவையும் எண்ணும் மனத்தையும் கூடத் தீய்த்துவிடும்" (அதனால்தான் நாவறண்டு நிற்கிறான் போலும்!)

"இராம பாணத்தை ஒரு கவியின் பல் அலங்காரப் பண்பிற்கு ஒப்பிடலாம். கவிஞனுக்கு நல்ல உள்ளம் வேண்டும். அவனது நல்ல சொற்கள், குறித்த பொருளைக் குறித்த வண்ணம் தருவனவாகவும் புகழ் விளங்க நிற்பனவாகவும், ஓசையும், தொடர்ச்சியும் உடையனவாகவும், எல்லையற்ற புகழ் தருவனவாகவும், இருக்கும். அதுபோல, இராகவன் பகழியும் குறித்த இலக்கில் சென்று குறித்த பொருளை எய்கிறது. வில்லிலிருந்து ஓசையும் தொடர்ச்சியும் கொண்டு வருகின்றது. நெடுங்காலம் புகழ் விளங்க நிற்கிறது. மாற்றான கவிஞனையும் இரசிக்க வைக்கும் நல்லியற் கவிஞனின் சொல்போல, மாற்றானான என்னையும் இரசிக்க வைக்கவும், பிரமிக்கவும் வைப்பது இராமனின் வில் எழுப்பும் கணை! கவிஞனின் கருத்தை

நிறைவேற்றித் தருவதில் சொல் வெற்றி பெறுவது போல, காகுத்தன் கருத்தை நிறைவேற்றுவதில் வில் வெற்றி பெறுகிறது" என்றெல்லாம் விவரிக்கின்றான்.

"நல்லியற் கவிஞர் நாவில்
பொருள்குறித் தமர்ந்த நாமச்
சொல்எனச் செய்யுள் கொண்ட
தொடைஎனத் தொடையை நீக்கி
எல்லையில் செல்வம் தீரா
இசைஎனப் பழுதிலாத
பல்அலங் காரப் பண்பே
காகுத்தன் பகழி!"

என்று வீரனை வீரன் போற்றும் அருமை இது!

## தேவியின் சொல்லும் தேவனின் வில்லும்

சீதாப் பிராட்டி சிறையிருந்த ஏற்றத்தால் தான் சீராமனின் வீரம் புகழப் பெற்றது. தேவி சொற்காத்து நின்ற திறத்தால்தான் தேவனின் வில்லாற்றல் வெளிப் பட முடிந்தது. தவம் செய்த தவமாம் தையலாக எம்பெருமாட்டியிருந்த பெருமையால்தான் கோதண்ட ராமன் 'ஜய' ராமனாக முடிந்தது.

சானகியன்றி வேறு எந்தப் பெண் அங்கிருந்தாலும் இப்படிப் பொறுமைத் தவம். செய்திருக்க முடியுமா? அப்பிராட்டிக்கு உலகையே தன் கற்பால் சுட்டெரிக்கும் சக்தி உள்ளது. ஏன், சுடும் நெருப்பையே குளிரச் செய்யு மாற்றலும்கூட உண்டு! இருப்பினும், அது செய்யாது பொறுத்திருந்தாளே! அதுதான் பெருமை! அவனது விற்பெருமை காக்க இவள் சொற்காத்து நின்றாளே!

ஆஞ்சனேயர், எம்பெருமாட்டியின் துயர்கண்டு, "ஆறு துயர்; அஞ்சொல் இள வஞ்சி! அடியேன் தோள்

ஏறு கடிது" என்று அடி பணிகிறார். அவன் தோளில் ஏறிவர இயலாமையை அன்போடு பக்குவமாக எடுத்துரைத்த தேவி, "அனுமனே! இந்த ஓர் உலகை மட்டுமென்ன, எல்லை நீத்த உலகங்களையும் ஒரு சொல்லால் சுடும் ஆற்றல் (கற்பு) எனக்குண்டு. ஆயினும் நான் அது செய்ய மாட்டேன். என் சொல் வெற்றி பெற்றால் காகுத்தனின் வில் மாசு படுமே, ஆதலால், அந்த எண்ணத்தைக் கைவிட்டு விட்டேன்" என்கிறாள்.

"அல்லல் மாக்கள் இலங்கைய தாகுமோ?
எல்லை நீத்த உலகங்கள் யாவுமென்
சொல்லி னால்சுடு வேன்அது தூயவன்
வில்லின் ஆற்றற்கு மாசென்று வீசினேன்"

அப்படி, வீரவெஞ்சிலை மாசுணக்கூடாது என்று தான் "சொற்காத்துச் சோர்விலாளாக" எம்பெருமாட்டி இருஞ்சிறையில் இருந்திருக்கிறாள். 'வில்' பேசிக் கொள்ளும் என்று 'சொல்' காத்த அழகல்லவோ எம் பெருமாட்டியின் சிறப்பு!

"உலக்கை குத்த உடம்பில் வலு இருந்தாலும் ராஜமகிஷி செய்வாளோ?" என்றார்கள். ஆம். அப்படி அவள் செய்தால் இராஜாவுக்கல்லவோ இழுக்கு! இந்த இடத்தில் நம்பிள்ளை, 'அவன் வம்சத்துக் கொத்தை' என்றார். அவனது இக்ஷ்வாகு குலப்பெருமைக்கு (வம்சத்துக்கு) இவள் அடிமை என்றும், அவனது வம்சத்திற்கு (மூங்கில் வில்லுக்கு) அடிமை என்றும் இருபொருள்தரும் அழகே அழகு!

"தற்காத்துத் தற்கொண்டாற் பேணித் தகைசான்ற
சொற்காத்துச் சோர்விலாள் பெண்"

என்னும் பேரிலக்கணத்திற்கு ஒப்பற்ற இலக்கியமன்றோ பிராட்டி!

# 8. ஆற்றல் சால் பெண்மை

அணிமாட அயோத்தி நகரில் அவதரித்துக் கானும் கடலும் கடந்து இமையோர் இடுக்கண் தீர்த்து, அறம் தலை நிறுத்திய ஆதிப்பிரானின் வரலாற்றை என்றுமுள தென்தமிழில் இயம்பி இசை கொண்டவன் கவிச் சக்கரவர்த்தி கம்பன். அவனுடைய கவித்திறனை எண்ணி வியப்பதா, பாத்திரப் படைப்பைப் புகழ்வதா, நாடகத்திறனை நயப்பதா என்று பலரும் விம்முற்று நிற்கின்றனர். நானோ அவன் காட்டிய பெண்மை இலக்கை, அவன் போற்றிய பெண்மைச் சிறப்பை எண்ணிக் கிறுகிறுக்கிறேன். அதனால் சில கிறுக்கு கிறேன்.

'காசலம்பு முலையவர் கண் எனும் அம்பும் நெறி யின் புறம் செலாக் கோசலம்' எனும் போதே சமுதாய ஒழுக்க, அற நெறிக் கோட்பாட்டின் உயிர் நாடி பெண்கள் என்பதை அடிக்கோடிட்டுக் காட்டி விட்டான் கம்பன். அந்தப் பெண்களை அச்சம், மடம், நாணம், பயிர்ப்பு எனும் அணிகலன்கள் உடையவர் என்று மட்டும் காட்டாமல் ஆற்றல் மிக்கவராகவும் காட்டியுள்ளான். ஆற்றல் என்ற சொல், சகிப்புத்தன்மை, பொறை, பெருமை, வலிமை, நோற்றல் என்ற பல பொருள்களைக் கொண்டது. பெருந்தடங்கண் பிறை நுதலாரிடம் இந்த ஆற்றல் எந்தெந்த வகையில் ஒளிவிட முடியும் என்று காட்டுவது கம்பனின் காப்பியம்.

## ஆற்றல்சால் கோசலை

ஆழ்வார் வாக்கால் 'மன்னு புகழ்' பெற்ற கோசலை, கம்பநாடுடைய வள்ளலால் 'ஆற்றல்சால் கோசலை' 'திறம் கொள் கோசலை' என்றெல்லாம் பாராட்டப் படுகிறாள். கோக்கள் வைகும் முற்றத்தான் முதல் தேவி என்பதாலோ, மூவுலகும் ஈன்றானை முன் ஈன்றானைப் பெற்ற பெருமையாலோ மட்டுமா இவள் புகழ் பெற்றாள்? இல்லை. இவளது ஆற்றல், சகிப்புத் தன்மை யாக, பெருந்தன்மையாக, மலர்ந்து வெளிப்படுவதைப் பல இடங்களில் காண்கிறோம். இதுவே அவளுடைய புகழுக்குக் காரணம்.

தன் மகன் கோமுடி தரித்து வருவதை எதிர் பார்த்துத் தழைக்கும் உள்ளத்துக் கோசலையின் முன் குழைக்கின்ற கவரியும் கொற்ற வெண்குடையு மின்றித் தமியனாய் இராமன் வந்து வணங்குகிறான்.

ஐயம் கொண்ட கோசலை, பிற மகளிர் நிலைக்கு மாறாக, நிதானமாகப் பேசுகிறாள். 'நினைந்ததென்? இடையூறுண்டோ நெடுமுடி புனைதற்கு?' பரதனே துங்கமா முடி சூடுகிறான் என்ற பதில் கேட்டும் ஆத்திரம் கொள்ளாத அந்தப் பெரியவள், 'முறைமை அன்று என்பது ஒன்றுண்டு; மும்மையின் நிறை குணத்தவன். நின்னினும் நல்லனால்' என்று பேசுகிறாள். மாற்றாள் மகன் தலையில் தன் மகனின் உரிமை முடி போகிறது என்று அறிந்தும் அவனைப் போற்றும் பண்பு எத்துணை உயர்ந்தது! வேறு எந்தத் தாயிடமிருந்தும் இச் சொற்களை எதிர்பார்க்க முடியாது. 'நால்வர்க்கும் மறுவில் அன்பினில் வேற்றுமை மாற்றிய' கோசலையாம் அன்னம் மட்டுமே இப்படிப் பேச முடியும். 'உம்பிக்கு நானிலம் கொடுத்து ஒன்றி வாழுதி' என்று வாழ்த்தவும் செய்கிறாள்.

'ஏழிரண்டாண்டு அகன் கானிடை மாண்ட மாதவருடன் வைகி' வரச் சொன்ன தந்தையின் கட்டளையை இராமன் கூற, அதிர்ச்சியடைகிறாள் அன்னை. அப்போதும் அந்தக் கற்பரசி தன் கேள்வியில் அறிவும், கணவன்மீது அன்பும் சேர்ந்து தொனிக்க, "அன்பிழைத்த மனத்து அரசற்கு நீ என் பிழைத்தனை?" என்று வினவுகிறாள். (கணவனும், சக்கரவர்த்தியும், பாசமிக்க தந்தையுமான தசரதனைக் குறை கூறாமல், உன்னை நாடுகடத்திக் காடேகச் செய்ய நீ என்ன பிழை செய்தாய்' என்று கேட்பது அவளது கற்புச் சிறப்பைக் காட்டுகிறது.) மகனது பிரிவுக்காக மறுகும் அவள், கணவன் புகழுக்காகவும் அழிகிறாள். கன்று பிரி காராவின் துயருடைய தாய் ஆயினும், கணவன் உயிர் காக்க அவனுடன் இருக்க உறுதி கொள்கிறாள். இரண்டு கன்றினுக்கிரங்கும் ஓர் ஆப்போல் தவிக்கிறாள் கோசலை. அந்த நிலையிலும் கொடுங் கைகேசியிடம் வாயிழக்காமலும், அவளை ஏசாமலும் பொறுமை காக்கிறாள். தற்கொண்டான் புகழ் காக்க பிரியமுடியாத மகனைப் பிரியவும் தயாராகிறாள். அவளது இந்த ஆற்றல் தான் பரதனை வாயாரப் புகழ வைக்கிறது. எண்ணில் கோடி இராமர்களும் பரதனுக்கு ஈடாக மாட்டார்கள் என்றும், பரதன் உயிர் போனால் வானும் மண்ணும் உயிர்களும் வாழா என்றும் வாயாரப் புகழ்கிறாள்.

மகன் கோமுடி துறந்து காடு நோக்கிப் பெயர்ந்ததும் நல்லதாயிற்று. 'கைவீரக் களிறனைய காளை' குகனோடு ஐவராக வாய்ப்புக் கிடைத்தது என மகிழும் கோசலை – 'ஆற்றல்சால் கோசலை' எனப் பாடப்பெற்றது சரி தானே!

## தியாகப் பெருமை

மாமல்லபுரத்துச் சிற்பியின் கைவீச்சும், மொகலாயச் சிற்பியின் நுட்பமான வேலைத் திறனும் ஒருங்கே பரிமளிப்பது பொன்றது கம்பனின் இராமாவதாரம். பெரிய, முதன்மையான, காப்பியம் முழுதும் வரக் கூடிய பாத்திரங்களைப் படைப்பதில் திறமை காட்டுவது போலவே, ஓரிரு காட்சியில் வரும் பாத்திரங்களிலும் நுட்பமான திறத்தைக் காட்டி விடும் சமர்த்தன் கம்பன். 'இளையமென் கொடி', 'இருவரையும் ஈன்று எடுத்தாள்' எனப்படும் சுமித்திரை நூலில் சில இடங்களிலேயே காட்டப் பெறுகிறாள். ஆனால் அவளைத் 'தூய சுமித்திரை', 'சோகம்தீர்ப்பாள்', 'அறம்தானே என நின்றாள்' என்றெல்லாம் உயர்த்துகிறான் கம்பன். இந்தப் பெருமைகளெல்லாம் அவளுக்கு எதனால் வந்தன? ஒப்பற்ற தியாகத்தால் வந்தவைதான். இரு பிள்ளைகளை ஈன்ற அந்த நல்லாள் இருவரையும் பிறருக்குத் தொண்டு செய்யவே விட்டாளே! ஒருவன் பரமனின் அவதார மாம் இராமனுக்கும், மற்றவன் பரம பாகவதனாம் பரதனுக்கும் ஆளாயினர். தன் எதிரே இராமனும், இலக்குவனும் வந்து நிற்கையில் கலங்குகிறாள் சுமித்திரை. தன் பொன்னடி தொழுத தன் மகன் இலக்குவனைப் பார்த்துச் சில சொற்கள் சொல்கிறாளே! இலக்கிய வரலாற்றில் பொன் எழுத்துக்களில் பொறிக்கப்படவேண்டிய அடிகள் அவை!

"ஆகாதது அன்றால் உனக்கு அவ்வனம் இவ்வயோத்தி
மாகாதல் இராமன் நம் மன்னவன்; வையம் ஈந்தும்
போகா உயிர்த்தாயர் நம் பூங்குழல் சீதை என்றே
ஏகாய், இனி, இவ்வயின் நிற்றலும் ஏதம் என்றாள்"

*(அயோத்தியா. நகர்நீங்கு படலம்: 146)*

தாயர் என்ற சொல்லில் தாய்மார்களாம் தங்கள் மூவரையும் உள்ளடக்கிப் பேசினாள். எப்படித் தொண் டாற்ற வேண்டும் என்றும் கட்டளையிடுகிறாள்.

"பின்னும் பகர்வாள், 'மகனே! இவன்பின் செல்; தம்பி
என்னும்படி அன்று; அடியாரினின் ஏவல் செய்தி.
மன்னும் நகர்க்கே இவன் வந்திடின், வா; அது அன்றேல்
முன்னம் முடி' என்றாள்: வார்விழி சோர நின்றாள்"

*(நகர் நீங்குபடலம் 147)*

இராமனைக் காத்து, அல்லது காக்கத் தன் மகன் உயிர் தந்தாலும் நலம் என்று கருதும் தியாகத்தாய் இவள். இராமனுக்கு ஆபத்து என்று நினைக்கவும் முடியாமல் கண்ணீர் வடித்த பாசதீபம் பரிவுச்செல்வம் தன்மகன் உயிரையும் தியாகம் செய்யத் தூண்டுகிறதே! அதுவல்லவோ இப்பெண்ணின் தனிச் சிறப்பு! அதனால்தான் இலக்குவன் போர்க்களத்தில் விழுந்து கிடப்பது கண்ட இராகவன், 'அன்னை முன்னம் முடி என்ற சொல்லை நிறைவேற்றி விட்டாயா!' என்று கதறுகிறான்.

## இனிய செய்யும் ஆற்றல்

கோசலத்துப் பெண்களின் சிறப்பைக் காட்டியது போலவே கிட்கிந்தைக் குரக்கினத்துப் பெண்மையிலும் சில சிறப்புகளைக் காட்டுவான் கம்பன். அரசியலறிவு, வருவதுணரும் ஆற்றல் இவற்றிற் சிறந்த தாரை வாலியின் அருமருந்தனைய தேவி. துன்னிய அன்பினர் சொல்லக்கேட்டு, வாலியைத் தம்பியுடன் போருக்குப் போக வேண்டாம் என்று தடுக்கிறாள். அவளை ஏசி விட்டுச் சென்ற வாலி இராமனது வாளியால் வானுக்கப் புறத்தானாகிறான். வாலியைப் பிரிந்த

தாரையின் வாழ்வு மைந்தனுக்காகவும் பிறருக்காகவும் அமைகிற அருள் வாழ்வு. அப்பொன் மணி நூல் தாங்காது அனைத்துயிர்க்கும் அருள்தாங்கிக் கைம்மைத் தவம் புரிந்த அவளது ஆற்றலையும் அழகுறக் காட்டுகிறான் கவிச்சக்கரவர்த்தி.

சுக்கிரீவன் கார் காலம் முடிந்தபின்னும் வானரப் படையுடன் தேவியைத் தேட முயற்சி மேற்கொள்ளாது அயர்ந்து, மது மயக்கத்தில் மதிமயங்கியிருக்கிறான். இளவலை ஏவி, சுக்கிரீவனின் செய்நன்றி மறந்த தன்மையை நினைவூட்டச் சொல்கிறான் இராமன். இளைய பெருமாள் வந்த வேகத்தை வேறு யாரும் மாற்ற முடியாது என்ற நிலையில் தாரைதான் முன்வந்து உதவுகிறாள். தன் கணவனைக் கொல்லக் காரணமான சுக்ரீவன், தனக்கு இந்த நிலை ஏற்படக் காரணமானவன் என்றும் கருதாது, இன்னா செய்த அவனுக்கும் இனிய செய்ய முன் வரும் அவள்து பெருமை கடலினும் பெரிது.

'பார்குலா முழுவெண் திங்கள் பகல்வந்த படிவம் போலும்
ஏர்குலா முகத்தினாளை இறைமுகம் எடுத்து நோக்காத்
தார்குலாம் அலங்கல் மார்பன் தாயரை நினைந்து நைந்தான்'

(கிட்கிந்தைப்படலம் 51)

மங்கல அணியின்றி, மணியணி துறந்து, குங்குமம் சாந்தம் அணியாத மார்பகங்களையும் கழுத்தையும் போர்த்திய ஆடையுடன் கைம்மைக் கோலம் கொண்டு எதிர் நின்ற நங்கை தாரை, இலக்குவனின் உள்ளத்தில் சீற்றம் மாறி அருள் பொங்கச் செய்தாள். அவனது தாயரை நினைவுபடுத்தும் அளவு இரக்கம் தரும் கைம்மைக் கோலத்தில் காட்சி தரும் தாரை குரக்கினத் திலும் பெண்மையின் பெருமை, கற்புத்திண்மை உண்டு

என்று காட்டிவிடுகிறாள். அவளது ஆற்றல், இன்னா செய்த கூட்டமான சுக்ரீவன், அனுமன் போன்றவர்க்கும் இனிய செய்யும் பண்பாக மலர்கிறது. தன் கணவனைக் கொன்ற தன் அண்ணனையே மூலநாசம் பெற முடித்த சூர்ப்பணகை எங்கே! தாரையின் சால்பு எங்கே! என்று ஒப்பிட்டுப் பார்க்க வைக்கிறானே கம்பன்!

## பாசமா? கற்பா?

சந்தன மரமாம் இராமனைச் சுற்றித் தழுவிய முல்லை சீதை என்றால், கருவேலமரமாம் இராவணனைப் பற்றிப் படர்ந்த முல்லை மண்டோதரி. மயன்மகளாம் இவள், தசமுகனை நினைத்ததேயில்லை என்றான் கம்பன். ஏன்? மறந்தால்தானே நினைப் பதற்கு! 'நினைத்ததும் மறந்ததும் இலாத நெஞ்சினாள்' அவள். தன் கணவன் பிறன்மனை விழைந்த பெருங் குற்றம் செய்தும் அவனைக் கடிந்து பேசாத கற்பரசி இவள். இவளது பொறை எல்லை கடந்தது; பூமி தேவியை ஒத்தது. தன் காமத்திற்காக அக்கனை, அதிகாயனை, கும்பனை மற்றும் உள கிளைகளை அடுக்கடுக்காய்ப் பலி தந்தான் தசமுகன். கடைசியில் கோள் இரண்டையும் கொடுஞ்சிறை வைத்த குமரனாம் இந்திர சித்தனையும் இழந்தான். இந்த நிலையில் பாசமிக்க தாயான மண்டோதரி கற்பறம் வழுவாத நிலையை அழகுறச் சித்திரிக்கிறான் கம்பநாடுடைய வள்ளல். அந்த நிலையில் மகனை இழந்த சோகத்தினால் அவள் தன் கணவனை ஏசினால்கூடத் தவறில்லை எனலாம். (தானிய மாலை, அதிகாயனை இழந்தபோது 'பேதையாய்க் காமம் பிடித்து உழல்வாயோ!' என்று ஏசவும் செய்தாளே!)

ஆனால் மண்டோதரியோ,

"பஞ்செரி உற்றதென்ன அரக்கர்தம் பரவை எல்லாம்
வெஞ்சின மனிதர் கொல்ல விளிந்ததே மீண்டதில்லை!
அஞ்சினேன் அஞ்சினேன் அச்சீதையென் றமிழ்தாற் செய்த
நஞ்சினால் இலங்கை வேந்தன் நாளையித் தகையன் அன்றோ!'

*(இராவணன் சோகப்படலம் 53)*

என்று, மறுநாள் தன் கணவனுக்கு இந்த நிலை வந்து விடுமே என அஞ்சும் கற்பின் மிக்காளாகக் காட்சி தருகிறாள். தன் கணவன் இறந்து கிடந்த போதும் 'இராவணனார்' என்று பேசுவாள். அவன் உடலை இராமபாணம் துளைத்தது என்று சொல்லவும் நடுங்கி, 'உடல் புகுந்து தடவியதோ ஒருவன் வாளி!' என்று புலம்பும் இவளது பெருமை நாயன்மார்களாலும் சிறப்பிக்கப் பட்டதன்றோ!

## தவம் செய்த தவம்

காவியத் தலைவி சோகத்தாளாய நங்கையாய் அசோக வனத்தில் சிறையிருந்த நிலை தேவர்க்கும் அசோக நிலையைத் தந்தது. 'இலங்கையில் பிராட்டியையா கண்டேன்! இற்பிறப்பும் இரும் பொறையும் கற்பும் களிநடம் புரிவதையன்றோ கண்டேன்' என்கிறான் அனுமன். ஆம்: தேவியின் பொறுமைதான் கற்பையும், குடிப்பிறப்பையும் காத்தது. பசியை மட்டுமா ஆற்றியிருந்தாள் தேவி! பிரிவுத் துயரை மட்டுமா ஆற்றியிருந்தாள்! தன் அனைத்துத் திறமையையும், கற்பு வலிமையையும், அடக்கியிருந்த ஆற்றல் மிகப் பெரிதன்றோ! அந்தப் பொறுமையல்லவா தேவியின் பெருமை! அனுமன், தேவியைத் தன் தோளில் ஏறி வரச்சொன்னபோது அவனுக்குப் பலவகையில் சமாதானம் சொன்ன தேவி, ஒரு உண்மையையும் தெளிவுபடுத்துகிறாள்.

"அல்லல் மாக்கள் இலங்கைய தாகுமோ
எல்லை நீத்த உலகங்கள் யாவுமென்
சொல்லி னால்சுடு வேன் அது தூயவன்
வில்லின் ஆற்றற்கு மாசென்று வீசினேன்!"

*(சூடாமணிப்படலம் 18)*

உலகெலாம் சுடும் ஆற்றலும், கற்புத் திறனும் தனக்கு உண்டு எனினும் தன் கணவன் வில்லின் ஆற்றற்கு மாசு வரக்கூடாதே என்பதற்காகப் பொறுமை காத்து நிற்பதாகப் பிராட்டி சொல்வது உண்மை. இந்தச் சீதையாம் தையல் தன் கற்பின் திறனால் இராவணனை வென்று மீண்டிருந்தால் இராமன் விஜயராகவனாக, ஜெயராமனாக இருக்கமுடியுமா என்கிறார் தியாகப் பிரம்மம் (மாஜானகி செடபெட்டக என்ற காம்போதி ராகக் கீர்த்தனையில்).

கணவன் புகழ் காக்கவே பொறுமைத் தவம்பூண்ட, நோற்ற, பேராற்றல் பெருந்தக்க பெண்ணாம் சானகி யிடம் அமைந்திருக்கிறது.

## ஒரு சில

கூனியின் சொல்லாற்றலை, சூர்ப்பணகையின் நினைத்ததை முடிக்கும் ஆற்றலை (கொல்லாத மைத்துனனைக் கொன்றாய் என்று பல்லாலே இதழ் அதுக்கிப் பழி தீர்த்த செயல்.) இவற்றையெல்லாம் விட்டு மங்கை நல்லாரின் மற்றைய சிறந்த ஆற்றல்களை மட்டுமே இங்குக் காட்ட விழைந்தேன். பெண்மையின் ஆற்றலைப் போற்றிய கம்பன் புகழ் வாழ்க!

# 9. மௌன நாடகம்

தமிழன்னை நோற்றுப் பெற்ற கவிமகன் கம்பன். தமிழனின் பண்பாட்டை, அதனழகைப் பிரதிபலிக்கும் காவியக் கண்ணாடி கம்பராமாயணம். உலக மக்கள் உய்வதற்கு என்றும் பின்பற்ற வேண்டிய ஒழுக்கக் கோட்பாடுகளைத் தன் வாழ்வின்வழி காட்டிய நாயகன் இராமன். உலகம் இதுவரை, ஏன், இனியும் கண்டிராத, காண முடியாத ஞானக் களஞ்சியம் இராமாயணம். மனிதகுலம் முழுமைக்கும் சிந்தனைச் சொத்து இராமாயணம். இந்தியரின் ஆன்மாவைப் பிரதிபலிக்கும் எதிரொலி இராமாவதாரம்.

ஆதிகவி வால்மீகி காவ்யம், இராமாயணம், பௌலஸ்த்யவதம், சீதாயாஸ்சரிதம்மஹத் என்று பாடினார். கம்பன் இராமாவதாரம் ஆக்கினார். கடி போலியான இந்தியில் துளசிதாசர் இராமசரிதமானஸ் யாத்தார். மலையாளத்தில் எழுத்தச்சன் இராமாயணம் மலர்ந்தது. தெலுங்கில் ரெங்கநாத இர்ராமாயணம் இயற்றப்பட்டது. கன்னடத்தில் தொறவே இராமாயணம் உண்டு. ஒரியாவில் வைதேகீச விலாசம் இருக்கிறது. மராட்டியில் ஸ்ரீதர ராமாயணம் மலர்ந்துள்ளது. பஞ்சாபியில் குருகோவிந்தசிங் இராமாயணம் இடம் பெற்றுள்ளது. குஜராத்தியில் கிரிதர இராமாயணம், அசாமியில் மாதவகந்தஸி இராமாயணமும், வங்காளி யில் க்ருத்திவாச இராமாயணமும், காஷ்மீரியில் இராமாவதார சரிதமும், எழுந்துள்ளது. இந்திய

மொழிகளில் இராமகாதை இலக்கிய தீபங்களாக ஒளி விடுகின்றன. பாரத புத்திரர்களின் உயிரில் கலந்த உறவுகளாக இராமாயணமும் இராமனும் திகழ்கிறார்கள். "எல்லாப் பொருளும் இதன்பால் உள" என்று குறளின் பெருமையைத் திருவள்ளுமாலை சொல்லும். அது போலக் கம்பராமாயணத்திலும் இல்லாத பொருளில்லை எனலாம். அரசியலா, ஆன்மிகமா, இசைநுட்பமா, ஈகைத் திறமா? உரமா, கூத்தா, மெய்ப்பாடா, குறிப் பறிதலா, உணர்ச்சிக் கொப்பளிப்பா? காதலா, கடமையா, நன்றியா, நட்பா எது வேண்டும்? வாருங்கள். கம்பனின் இலக்கியப் பெட்டகத்தில் காணுங்கள்.

இசை, நடனம் பயின்ற மாணவியாக இருந்தபோது கம்பன் பாடலைக் காரைக்குடி கம்பன் திருநாளில் பாடியும் இருக்கிறேன். ஆடியும் இருக்கிறேன். ஒன்பது வயதில் கம்பன் மேடையில் கொண்ட தொடர்பு இன்று வரை, ஏன் உயிர் உள்ளளவும் தொடரும் என்பது என் பேறு!

### "சொல்லாத சொல்"

"சொல்லாத சொல்லுக்கு விலை ஏதும் இல்லை" என்று கவியரசரின் பாடல் வரி ஒன்று உண்டு. சொல்லாத சொல் எப்படி? அதுதான் மௌனம். மௌனம் மிக விலையுயர்ந்தது. மௌனம் மாபெரும் தவம். மௌனம் தங்கம். மௌனம் கலகம் நாஸ்தி. மௌனம் உன் பெருமையை உயர்த்தும். இப்படி மௌனத்தின் பெருமையைப் பலபடச் சொல்வார்.

நடிகர் திலகம் சிவாஜிகணேசன் உலகப் புகழ் பெற்ற மனோகரா, பராசக்தி படங்களில் நீண்ட வசனங்களைப் பேசிப் பெற்ற புகழ் போலவே,

புருவத்தை உயர்த்தி, கைவிரலை அசைத்து வேறு எதுவும் பேசாமல் நடித்த இடங்களால் புகழ் பெற்றதும் உண்டு! "போனால் போகட்டும் போடா" என்று வலது கையை அசைத்தே பாவத்தைக் காட்டிவிடுவார். அது போல கம்பனில் 20 பாடல்களில் வர்ணனை செய்யும் இடங்கள், 12 பாடல்களில் வீரவசனம் பேசுதல், 10 பாடல்களில் கோபத்தைக் கொட்டுதல் எல்லாம் உள்ளன. பேசாமல் பேசி, மெய்ப்பாட்டால் நிகழ்வைப் புரிந்துகொள்ள வைக்கும் ஆற்றலும் கம்பனுக்குண்டு.

மிதிலைக் காட்சிப் படலம் கம்பனின் சொந்தப் படைப்பு. மூல நூலில் இல்லை. முனிவன் காதல் காட்சியை ஏன் வைக்கவில்லை? இரசிக்கத் தெரிய வில்லையோ? சங்க நூல்களில், அகப்பாடல்களின், தோய்வும் கம்பனுக்கு இருந்தமையால், காட்சி, ஐயம், தெளிவு என்று முறைப்படி பாடல்களை மிதிலைக் காட்சிப் படலத்தில் பாடுகிறான். கம்பராமாயணமே படிக்காதவன் கூட "அண்ணலும் நோக்கினான்; அவளும் நோக்கினாள்" என்றதும் காட்சியைச் சொல்லி விடுவான். உலகறிந்த தொடர் இது.

"பொன்னின்சோதி, போதினில் நாற்றம் பொலிவேபோல்
தென் உண் தேனின் தீஞ்சுவை, செஞ்சொற்கவி இன்பம்"

எனக் கன்னி மாடத்தில் நின்றிருந்தாள் தேவி.

கல்லும் புல்லும் கண்டுருகப் பெண்கனி நின்றாள். அமுது ஒத்தாள், மலர்மேல் நின்ற மங்கை. உமையாள் ஒக்கும் மங்கையர் உச்சிக்கரம் வைக்கும் கமையாள். சதகோடி மின்சேவிக்கும் மின் அரசு. அழகுக்கே அழகு சேர்க்கும் பாவை எனச் சீதை நின்றாள்.

இடம்கொள் நான்முகனையும், உலகையும், மேலுலகையும், படைக்கும் ஆற்றலனான கௌசிக முனி

முன்வரப் பின்னே, பின்னவன், இலக்குவன் தொடர, நடுவில் காகுத்தனாம் கரிய செம்மல் வீதிவாய் நடந்தான். இடையில் தானே ஸ்ரீராமன் வந்த வதரித்தான்! ஆம், பரசுராமன், பலராமன் என்ற இரண்டு இராமர்களின் 'அவதாரத்தின் நடுவில் வந்தது தானே தசரத இராமாவதாரம்!

## "கண்ணிணை கலந்தன"

எண்ணரு நலத்தினாள் இனையள் நின்றுழி
கண்ணொடு கண்ணிணை கவ்வி ஒன்றை ஒன்று
உண்ணவும் நிலைபெறாது உணர்வும் ஒன்றிட
அண்ணலும் நோக்கினான் அவளும் நோக்கினாள்" (514)

வீதியில் சென்ற இராமன் நிமிர்ந்து பார்க்க, அந்த மாடத்தில் நின்றவள் யதேச்சையாக அன்னமாடும் துறையைப் பார்க்கக் குனிய, இரு கண் இணை கவ்வின, தவித்தன, பிறழ்ந்தன, மீண்டன. சீதையின் குவளை விழிகள், கூரம்பு விழிகள், வீரன் இராமனின் தோளில் தைத்தன. வீரக்கழலோன் தசரதராமனின் கமலக் கண்களோ இனத்தோடு இனம் சேர்வதுபோலத் தேவியின் தாமரை மொட்டுப் போன்ற தனத்தில் தைத்தன.

பருகிய நோக்கு எனும் பாசத்தால் உள்ளங்கள் பிணிப்புண்டன. இருவரும் மாறிப்புக்கு இதயம் எய்தினர். வசையில்லாத ஸ்ரீராமன் என்றான் கம்பன். சரிதான் மருங்கிலா நங்கை என்றானே. இடையில்லாத சீதை என்பது மட்டுமா பொருள்? இல்லை. அவள் மருங்கு பக்கத்தில் ஈடு சொல்ல வேறு ஒரு பெண் இல்லை எனும்படிச் சிறந்த மங்கை என்பதுதான் நேர்பொருள். இரண்டு உயிர் ஒன்றாயின. உள்ளம் இரண்டும் ஒன்று; உருவம்தானே இரண்டு என ஆனது.

"கருங்கடல் பள்ளியில் கலவி நீங்கிப் போய்ப்
பிரிந்தவர் கூடினால் பேசவும் வேண்டுமோ" (517)

பார்வையாலே நூறு பேச்சு; வார்த்தை அங்கு மூர்ச்சை ஆச்சு; மௌன மொழியால் இதயங்கள் பேசிய அழகைக் காதல் என்ற உயிர் இயற்கை உள்ளவரை யாரும் மறக்க முடியாதே!

"கண்ணொடு கண்ணிணை நோக்குஒக்கின் வாய்ச்சொற்கள்
என்ன பயனும் இல"

என்ற குறளின் விளக்கக் காட்சி இஃதே.

## "இந்த நாடகம், சனகன் அவையில்"

கார்முகப்படலம் பால காண்டத்தில் பன்னிரண்டாவது படலம். "வேள்வி காணிய வந்தார் வில்லும் காண்பார்" என்று விசுவாமித்திரன் சூசகமாகச் சொல்லி விட்டான். சனகன் ஞானமுள்ள அரசன். பாசமுள்ள தந்தை. சிவதனுசை வளைப்பவனுக்குச் சீதையை மணம் முடிப்பது என்ற கொள்கை உள்ளவன். அழகன், குணங்களில், வீரத்தில், வரத்தில் சிறந்தவன் இராமன் என்று கௌசிகன் சொல்லக் கேட்டு,

"ஐயன், வில் ஏற்றுமேல் இடர்க்கடல் ஏற்றும்"

என்று நினைத்தான். குன்றன்ன அந்தச் சிலையை (வில்லை) அறுபதினாயிரம் வீரர் இடையிடையே வைத்து இறக்கிப் பின் எடுத்து வந்தனர். அத்தனைப் பாரமானவில்! கம்பனுக்கு அறுபதினாயிரம் என்ற எண் மிக விருப்பமோ! தசரதன் அறுபதினாயிரம் ஆண்டுகள் ஆண்டான் என்பான். அமைச்சர் அறுபதினாயிரம் பேர் என்பான். அந்தப்புர மகளிர் எண்ணிக்கையும் அறுபதினாயிரமாம். வில்லெடுத்து வந்த வீரர் தொகை அறுபதினாயிரம் என்று பாடுவான்.

அவையில் கூடியிருந்தோர் பேசாமலிருப்பாரா? இது வில்லா, மேருமலையா என்றனர். "வள்ளல் மணத்தை நடத்த மகிழ்ந்தால் 'கொள்' என்று சீதையைத் தர வேண்டியது தானே! பிள்ளைமுன் வில்லைக் கொணர்ந்து போட்டது அறிவின்மை" என்று சனகன் மீது சினந்து பேசத் தொடங்கினர்.

1. ஞானமுனிக்கொரு நாணில்லை
2. கோன் இவனில் கொடியாரில்லை
3. மானவன் இச்சிலைகால் வளையானேல்
   பீன தனத்தவள் பேறிலள். (696)

என்றெல்லாம் பலபடப் புகன்றனர்.

இதெல்லாம் ஒரு புறம் நடந்து கொண்டிருக்க, சதானந்த முனிவன் இந்த வில்லின் வரலாற்றை விவரித்துக் கொண்டிருந்தான்.

"அன்றுமுதல் இன்றளவும் ஆரும் இந்தச் சிலை அருகு
சென்றும் இலர்; போய் ஒளித்த தேர்வேந்தர் திரித்தும் இலர்;
என்றும் இனி மணமுமிலை என்றிருந்தோம். இவன் ஏற்றின்
நன்றுமலர்க் குழல்சீதை நலம் பழுது ஆகாது" என்றான். (689)

இந்த இராமன் வில் ஏற்றினால்.. நன்று என்று ஐயம் தோன்ற இராமனைப் பார்த்தான். விசுவாமித்திரனின் எண்ண ஓட்டமோ 'இராகவா, உன்னையும் சீதையை யும் இணைத்து வைப்பதே என் வரவின் நோக்கம். (சூரிய குலத்தரசன் அரிச்சந்திரனைப் பொய்ச் சொல்ல வைப்பேன் என்ற சபதம் எடுத்து அதற்காக அவனை மனைவி, மகனிடமிருந்து பிரித்து வைத்த பாவி நான். அந்தப் பாவம் தீர, சூரியகுலத் தோன்றலான இராமச்சந்திரனைத் தேவியுடன் இணைத்துவைக்க வருகிறேன். நீ இந்த வில்லை வளைத்து சீதையின்

கைத்தலம் பற்றுவாயா?' என்று வினாப் பார்வை பார்க்கிறான். சனகன் ஏக்கப் பார்வை பார்க்க, சதானந்தன் சவால் பார்வை பார்க்க, விசுவாமித்திரன் வினாப்பார்வை தொடுக்க, இராமனோ விடையாகப் பார்வை ஒன்று தந்தான். அத்தனை பேரின் நினைப்புக்கும் பதிலாக ஒரு பார்வை பார்த்தானே அது என்ன பார்வை? "நீங்கள் அனைவரும் நான் வளைப்பேனா வில்லை என்று நினைக்கிறீர்களே, நான் வில்லை என் தோளாற்றலால் வளைப்பேன். குருவான இந்த முனி அனுமதி தந்தால்..." என்று பார்வையால், மௌனத்தால் பதில் சொன்னான்! இதை வேறு யார் இவ்வளவு அழகுறச் சித்திரிக்க முடியும்?

மூல நூலான வால்மீகி ராமாயணத்தில், "வத்ஸராம தனுர் பஸ்யே இதிராகவம் அப்ரவீத்" (மகனே இராமா! இந்த வில்லைப் பார்) என்று விசுவாமித்திரன் பேசினான் இங்கேயோ

"நினைந்த முனி பகர்ந்த எல்லாம் நெறி உன்னி அறிவனும்தன்
புனைந்த சடை முடிதூக்கிப் போர் ஏற்றின் முகம் பார்த்தான்
வனைந்தனைய திருமேனி வள்ளலும் அம் மாதவத்தோன்
நினைந்த எலாம் நினைந்தந்த நெடுஞ்சிலையை நோக்கினான்."
(690)

உன்னினான், பார்த்தான், நினைந்த எலாம் நினைந்தான், நோக்கினான், என்பது தவிர யாரும் பேச வில்லையே! மௌன நாடகம் நடக்கிறது. விசுவாமித்ரன், சதானந்த முனிவன் வில் குறித்தும், சீதை மணம் நடக்க வேண்டுமென்பது குறித்தும் பகர்ந்த பின், இராமனைப் பார்த்து சடை முடி துளக்கி, அசைத்து "என்ன முடியுமா?" என்கிறான். ஓவியத்து எழுத ஒண்ணா உருவத்தனான காகுத்தனும் முனிவனின் ஜாடையைப் புரிந்து கொண்டபின் அந்த வில்லைப் பார்த்து

'என்னால் முடியும்' என்பதுபோல் இசைவளித்தான். இதைத் திருவையாற்றில் ஸ்ரீ தியாகராஜ சுவாமிகள் படித்து, கேட்டு மகிழ்ந்து அப்படியே தன் கீர்த்தனையில் எடுத்தாண்டுள்ளார். மத்யமாவதி இராகத்தில்

"அலக லல் லாடக கனி
ஆராண் முனி எடு பொங்கனோ?"

என்ற பாடலில் சரணத்தில்,

"முனிகனு ஸைக தெலிஸி
சிவதனுவுனு விறிசே சமய முன"

(முனிவன் கண்சாடையைப் பார்த்துச் சிவ தனுசை வளைத்தபோது உன் முன் நெற்றியில் விழுந்த முடி யழகைப் பார்த்த கௌசிகன் எத்தனை மகிழ்ந்தானோ!)

முனிவன் பேச்சைக்கேட்டு வில்லை முறித்தாயே என்றால் வால்மீகி ராமாயணத்தை எடுத்துக் கூறி யுள்ளார் எனலாம். முனிவன் கண்ஜாடையைப் பார்த்து சிவனது வில்லை முறித்தபோது என்று பாடுவதால் கவிச்சக்கரவர்த்தியை இசைச்சக்கரவர்த்தி அப்படியே போற்றி எடுத்தாள்கிறார் என்பதே பொருள்! ஆடவர் பெண்மையை அவாவும் தோளினான் ஸ்ரீராமன். தோள் அழகுடன் தோள் வலி வீரமும் கொண்டவன். குறிப்பிற் குறிப்புணரும் அறிவாற்றல் மிக்கவன்.

## "சிறியதோர் முறுவல்"

ஆரண்ய காண்டத்தின் ஐந்தாவது பாடல் சூர்ப்பனகைப் படலம். காப்பியம், புதினம், நாடகம் எதுவாயினும் சுவை மாற்றம் இன்றியமையாதது. ஒரு சோகத்தை மாற்ற அடுத்து வேறு காட்சி வைத்து விடுவதும், ஒரு நகைச்சுவைக் காட்சிக்குப் பின்

அழுத்தமான கதைப்பகுதி அமைப்பதும் காவிய உத்தி. கானக வாழ்வு கரும்பாகவே இருந்துவிட்டால் அவதார நோக்கம் என்ன ஆகும்? பாகைத் துரும்பான சூர்ப்பணகை வரும் படலம். இதன் தொடக்கத்தில் ஒரு மௌன நாடகம் அரங்கேறுகிறது. பார்க்கலாமே: வீட்டைக் காடாக்கும் அடங்காப்பிடாரிகள் உளர். காட்டு வாழ்வை வீடு (சொர்க்கம்) என ஆக்கிய பத்தினித் தெய்வங்களும் புராண இதிகாசங்களில் உளர். அண்ணல் காந்திக்கு ஒரு அன்னை கஸ்தூரிபாவும், மோதிலாலுக்கு ஒரு சொரூப ராணி அம்மையாரும், நேருஜீக்கு ஒரு கமலாவும் வாய்த்தது அருமை. 'தாரமும் குருவும் தலைவிதிப்படியே' என ஒரு பழமொழி உள்ளது. காட்டில் ஒரு பொய்கை. அதில் ஓர் அழகிய அன்னம். சீதையின் மென்மைக்குத் தோற்ற அன்னம் வேகமாக நீந்தி ஒளிந்தது. இதைக் கண்ட ரகுகுலத் திலகன் சீதையை, அவளது நடையை, அன்னத்தின் தோல்வியைப் பார்த்துச் சிறுமுறுவல் செய்தான். சிறிது நேரம் கழித்து ஒரு பெரிய யானை நீர் அருந்திப் புறப்பட்டது. ஸ்ரீராமன் நடையைப் பார்த்து அது நாணிப் பேசாமல் ஒதுங்கிச் சென்றது. சீதை புன்முறுவல் பூத்தாள். என்ன இது? இருவருமே சிரித்தனர். இதில் என்ன மௌன நாடகம் என்பீரோ?

"அன்னம் உன் நடைக்குத் தோற்றது" – ஸ்ரீராமனின் பாராட்டு. யானையின் நடையை விட உங்கள் நடை கம்பீரம். இது சீதையின் சீராட்டு. சீதை புன்முறுவல் பூத்தாள். இது இயல்பு. புன்முறுவல் பூத்தல் என்பது தான் வழக்கு. முறுவல் செய்தான் என்று இராமன் சிரிப்பை வரவழைத்துக்கொண்டது போல் கம்பன் சொல்வது ஏன்? ஆரண்ய வாழ்வில் அடுத்த திருப்பம் வரப்போகிறது. சீதை பிரிவு தவிர்க்க முடியாதது

என்பது அவதார புருஷன், ரகுகுல சோமனுக்குப் புரிந்து விட்டது. சிரிப்பை வலுவில் வரவழைத்துக் கொண்டான். அதனால் சிறியதோர் முறுவல் செய்தான். சொல்லுக்குள்ளே இத்தனை சூட்சுமம் வைத்து மௌனத்திலேயே வருவது உணர்த்தி விட்டானே!

## தெரிதர உணர்ந்தேம்

இலங்கையிலிருந்து மீண்ட அனுமன் தன் புகழ் எதையும் சொல்லாமல் "சீதை நமக்கெல்லாம் ஆசி கூறினாள்" என்று மட்டுமே வானவர்களிடம் கூறினான். வானரங்கள் அனுமனைச் சுற்றி நின்று "ஐயா! நீ அங்கு அரக்கருடன் பெரும் போர் செய்திருக்கிறாய்" என்றன. எப்படி அறிந்தீர்கள் என்றான் அனுமன். உன் மேனியில் எத்தனை புண்கள்! அவைதான் காட்டிக் கொடுத்தன. நீ வென்றுவிட்டாய்! என்றது ஒரு வானரம். அதனால்தானே மீண்டு வந்திருக்கிறான் என்றது மற்றொரு குரங்கு. இலங்கையை நீ எரியூட்டி வந்து விட்டாய். அதுதான் அங்கிருந்து புகை இங்கு வருகிறதே. அரக்கர்கள் மிகப் பலசாலிகள். அதனால்தான் தேவியை நீ மீட்டு அழைத்து வரவில்லை. ஒன்றும் பேசாமல் அனுமன் இருந்த போதும் உண்மை நிலையை வானரங்கள் புரிந்து கொண்டுவிட்டதை "பொருதமை புண்ணே சொல்ல" என்ற பாடல் காட்சி இது. *(6016)*

இன்னும் ஒரு காட்சியைக் காணலாம். இலங்கையில் தேவியைக் கண்டு வந்த (கண்டு உவந்த) சொல்லின் செல்வன் ஸ்ரீராமனை வணங்கவில்லை. நேரே தென் திசை நோக்கி, இலங்கை நோக்கித் தலைவைத்து, இராமனுக்கு நேரே காலை நீட்டி வணங்குகிறான். இச் செயலைச் செய்த அனுமனுக்கும், பார்த்த இராமனுக்கும் நிலை புரிந்தது. 'சீதையைக் கண்டு

விட்டேன். கற்புடன் வணங்குதற்குரியவளாக, உன் பெருமை காத்து, உன் குலப் பெருமைக்குரியவளாக, பெருந் தெய்வமாக இருக்கிறாள். பெருந்தெய்வம் அவள். அதனால் வணக்கம் முதலில் அவளுக்கே' என்ற சாடை நாடகம் அனுமன் செய்கை. இராமன் புரிந்துகொண்டு பூரித்தான். கம்பனின் கவிதாவிலாசத்தை அறிந்து நாம் பூரித்துத் தமிழராய்ப் பிறந்ததற்கு மகிழ்கிறோம்!





## பேராசிரியை

# டாக்டர். சரசுவதி ராமநாதன்

இராமநாதபுரம் மாவட்டம், தேவகோட்டையில் 19.11.1939 அன்று நாராயணன், கோமதி தம்பதியினருக்கு மகளாகப் பிறந்தார். புலவர் க.வே.இராமநாதன் அவர்களை திருமணம் புரிந்து இல்லறம் நடத்தி வருகிறார்.

இவர் சென்னைப் பல்கலைக் கழகத்தில் தமிழ் வித்வான் படிப்பும், மதுரை காமராசர் பல்கலைக் கழகத்தில் முனைவர் பட்டமும் பெற்று, உயர்நிலைப் பள்ளியில் 10 ஆண்டுகள் ஆசிரியராகவும், 30 ஆண்டுகள் கல்லூரிப் பேராசிரியராகவும் சிறப்பாகப் பணியாற்றி உள்ளார். 'காவியக் கலைமாமணி', 'செந்தமிழ்த் திலகம்', 'சொல்லின் செல்வி' உள்ளிட்ட பல விருதுகளையும், பட்டங்களையும் பெற்றுள்ளார்.

கம்பரிடமும், கவிஞர் கண்ணதாசனிடமும் அளவற்ற பக்தியும், மரியாதையும் கொண்டவர். இவர் மாதா ஸ்ரீ அமிர்தானந்தமயி மாதா சேவா சங்கம், தெய்வீக வாழ்க்கைச் சங்கம் உள்ளிட்ட அமைப்புகளில் சேவையாற்றி வருகிறார். கண்ணதாசன் மையத் தலைவராகவும், சரசுவதி ராமநாதன் அறக்கட்டளையை நிறுவியும், கல்வி சமுதாயப் பணிகளுக்கு உதவியும் வருகிறார்.

இவர் கம்பனில்-3, இசையில்-3, திருவெம்பாவை-1, கந்தர்அநுபூதி-1, கம்பனும் கண்ணதாசனும்-1, வள்ளலார்-1, நிம்மதிக்கு-1 என்ற வகையில் நூல்கள் இயற்றியுள்ளார். இவர் நூற்றுக்கும் மேற்பட்ட கட்டுரைகளையும் எழுதியுள்ளார்.

கடல் கடந்து சென்று இவர் ஆற்றி வரும் தமிழ்ப் பணி குறிப்பிடத்தக்கது. ஆயிரத்திற்கும் மேற்பட்ட கோவில்களின் குட நீராட்டு விழாவில் வர்ணனையும் செய்துள்ளார்.



வானதி பதிப்பகம்